உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம!

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 22 — ஈசுவர ௵ வைகாசி௴ ௧௳ — பகுதி 11
1937 ௵ மே௴ 14௳

## கடவுள் வணக்கம்.

அப்பன்நீ அம்மைநீ ஐயனு(ம்)நீ
அன்புடைய மாமனு(ம்) மாமியு(ம்)நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளு(ம்) நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஓரூரு(ம்)நீ
துய்ப்பனவு(ம்) உய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாய் என்நெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்து(ம்)நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே. (1)

நற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி
நலஞ்சுடரே நால்வேதத்து அப்பால்நின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்துநின்ற
சொலற்கரிய சூழலாய் இதுஉன்தன்மை
நிற்பதுஒத்து நிலையிலா நெஞ்சந்தன்னுள்
நிலாவாத புலால்உடம்பே புகுந்துநின்ற
கற்பகமே யான்உன்னை விடுவேன் அல்லேன்
கனகமா மணிநிறத்து எங்கடவுளானே. (2)

நின்ஆவார் பிறர்அன்றி நீயேயானாய்
நினைப்பார்கள் மனத்துக்குஓர் வித்துமானாய்
மன்னானாய் மன்னவர்க்குஓர் வித்துமானாய்
மறைநான்கும் ஆனாய்ஆறு அங்கமானாய்
பொன்னானாய் மணியானாய் போகமானாய்
பூமிமேற் புகழ்தக்க பொருளேஉன்னை
என்னானாய் என்னானாய் என்னினல்லால்
ஏழையேன் என்சொல்லி ஏத்துகேனே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் இறைவன் எல்லாமாய் விளங்குகிறான் என்கிறார்.

(இ-ள்.) தந்தையும் தாயும், தலைவனும், அன்புமிக்க மாமனும் மாமியும் நீ, மனமொத்த மனைவியும் சிறந்த சம்பத்தும், ஒருகுலமும், உறவும், ஒரு ஊரும் நீ, ஜீவராசிகள் உண்பனவும், அநுபவிப்பனவும் ஆகிய பொருள்களை யுண்டாக்குபவனும் நீ, தோன்றாத் துணையாயிருந்து என் மனதைத் துறவு கொள்ளச் செய்பவனும் நீ, பசும் பொன்னாயும், நவமணிகளாயும், வெண் முத்துகளாயும் இருப்பவனும் நீ, எங்கணும் நீக்கமற நிறைந்து நிற்கும் கடவுள் நீ, ரிஷபத்தை வாகனமாகக்கொண்டு எழுந்தருளியிருக்கும் பெருஞ்செல்வன் நீயே யாவாய். (எ-று.)

எல்லாம்வல்ல முழுமுதற் பெருங்கடவுள் உலகில் வாழும் ஜீவராசிகள் அனைத்திலும் நீக்கமற நிறைந்திருக்கிறான் என்னும் பேருண்மையை இத் திருப்பாடலில் நன்கு விளக்கி யிருக்கிறார்.

2. இதனால், நெஞ்சில் வந்து குடிகொண்டிருக்கும் இறைவனை அகல விடமாட்டேன் என்கிறார்.

(இ-ள்.) இந்திரபதவி, பிரமபதவி, வைகுந்தபதவி முதலிய நல்ல பதவி களில் உள்ளவர்களெல்லாம் நாடும் உயர்ந்த பதவியிலுள்ள பெருமானே! ஞானசொரூபனே! நன்மை மிகுந்த பேரொளியே! இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களையுங் கடந்து நின்ற ஜனக ஜனந்தியர்களது வாக்குக்கும் எட்டாத மொழிதற்கு அருமையான சித்துப் பொருளே! இதுதான் உன்னுடைய இயற்கையான தன்மை என்று நிற்பதுபோல் ஒத்துக் காட்டி, ஒரு நிலையில் நிற்றலில்லாத உள்ளத்தினுள்ளே அழியுந் தன்மை யுடைய மாமிச பிண்டமான தேகத்தின் வழியாக புகுந்து குடி கொண்டிருக் கும் கற்பக தருவே! பொன்னிற மேனியானாகிய எம்பெருமானே! அடியேன் உன்னை விடமாட்டேன். (எ-று.)

"புண்புலால் யாக்கை புரை புரை கனிய......சிக்கெனப் பிடித்தேன் எங்கு எழுந்தருள்வது இனியே" என்ற திருவாசகச் செய்யுள், "நிலையிலா நெஞ்சந் தன்னுள் நிலாவாத புலால் உடம்பே புகுந்து நின்ற கற்பகமே; யான் உன்னை விடுவேன் அல்லேன்" என்ற அடியோடு ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

3. இதனால், சிவபெருமானின் பாத்துவத்தை எவ்விதம் புகழ்வது எனக் கேட்கிறார்.

(இ-ள்) உன்னை யொத்தவர்கள் வேறொருவரில்லாது நீயே யானாய், உன்னைச் சதா நினைந் துருகுபவர்களது மனதுக்கு ஒரு பெரிய விதை போன்றவனானாய்; அரசனானாய், அரசர்களுக் கெல்லாம் ஒரு அமுதம் போன்றவனானாய்; வேதங்கள் நான்காகவும் ஆனாய்; வேதாங்கங்களாகிய ஆறு ஆகமங்களுமானாய்; பசும் பொன்னானாய்; நவ மணிகளானாய்; போகப் பொருளானாய்; மண்ணுலகில் புகழத் தகுந்த பரம்பொருளே! உன்னை இன்னும் என்னவானாய்; என்னவானாய் என்று கேட்பதல்லாது, அறிவிலும் ஆற்றலிலும் திருவிலும் பரம ஏழையாகிய அடியேன் வேறு என்ன சொல்லி புகழ்வது? என்று தெரிய வில்லை. (எ-று.)

என்றும் அழியாது நிலை பெற்றவன் என்னும் பொருள் தரும் மன்னன் என்னுஞ் சொற்குரியவன் அப் பெருமானே யாதலால், "மன்னானாய்; மன்னவர்க் கோர் அமுதமானாய்" என்றும் கூறினார்.




# விஞ்ஞானியின் அறிவுரை





ஐரோப்பாவின் கூட்டுறவால் நம் இந்தியாவுக்குக் கிடைத்துள்ள நன்மைகள் பல. அவைகளுள் மிகச் சிறந்தது விஞ்ஞானமாகும். மேனாட்டில் பிறந்த பேரறிஞர்கள் விஞ்ஞானம் என்னும் ஒரு சாஸ்திரத்தைக் கண்டு பிடித்தனர். அவ்விஞ்ஞானத்தின் வாயிலாக அவர்கள் உலகில் இதுவரை நடவாத—கண்டும் கேட்டு மறியாத—பல அற்புதச் செயல்களைச் செய்து காட்டி வருகின்றனர். அவர்கள் தங்களது தீவிர ஆராய்ச்சியால் கண்டுபிடித்து வரும் சில விஷயங்கள் உலக மக்களையே பிரமிக்கச் செய்து விடுகின்றன.

இயற்கையில் மறைந்து கிடக்கும்—ஒடுங்கிக் கிடக்கும்-பல-சக்திகளை இவ்விஞ்ஞான சாஸ்திரிகள் கண்டுபிடித்து மனித சமூகத்திற்கு எவ்வெவ் வகையில் அவைகளைப் பயன்படுத்தலாம் என்று தங்கள் நுண்ணறிவு கொண்டு ஆராய்ந்து கடைசியாக ஒரு முடிவுக்கு வருகின்றனர்; தங்கள் எண்ணங்களை உருக்கொள்ளச் செய்கின்றனர். ரயில்வண்டிகள், மோட்டார்கார்கள், தபால் தந்திகள், கப்பல்கள், நீர் மூழ்கிக் கப்பல்கள், ஆகாயவிமானங்கள், டெலிபோன்கள், சினிமாக்கள், ரேடியோக்கள், பெரிய பெரிய இயந்திரங்கள் முதலிய தற்போதைய நவநாகரிக உலகில் வாழும் மக்களுக்கு அவசியமான உபகரணங்களைக் கண்டுபிடித்துக் கொடுத்தவர்கள் மேற்குறித்த விஞ்ஞானிகளே யாவார். மோட்டார், ரயில், கப்பல், ஆகாய விமானம் முதலிய நவீன வாகனங்கள் இல்லாவிடில் நாம் இக்காலத்தில் சுருங்கிய காலத்தில் நெடுந்தூரத்தைக் கடக்க முடியுமா? வெகு தொலைவிலுள்ள உறவினர் நண்பர்களின் க்ஷேமலாபங்களை உடனுக்குடன் அறிந்து கொள்வதும், அவசரச் செய்திகளை அவர்களுக்கு அறிவிப்பதும், இருந்த இடத்திலிருந்தே வேறோரிடத்தில் இருப்பவர்களோடு சம்பாஷிப்பதும், பல தேசங்களிலும் நடைபெறும் சங்கீதக் கச்சேரிகளையும் தம்மிடத்தில் இருந்தவாறே கேட்டு அநுபவிப்பதும் ஆகி

யவை எல்லாம் தபால் தந்தி, டெலிபோன், ரேடியோ முதலிய நவீனங்களா லல்லவோ நமக்குச் சாத்தியமாகின்றன.

எனவே, விஞ்ஞான சாஸ்திரத்தால் மனித சமூகத்துக்குப் பல நன்மைகள் விளைவது உண்மை. ஆயினும் இவ்விஞ்ஞான சாஸ்திரத்தினுல் மற்றொருபுறம் பல தீமைகளும் ஏற்படுகின்றன. ஐரோப்பியர் கூட்டுறவால்—அவர்களது நாகரிகத்தால்—இந்தியர்களாகிய நமக்கு ஒரு பக்கம் நன்மையும், மற்றொருபக்கம் தீமையும் விளைந்து வருவது போல, இவ் விஞ்ஞானத்தாலும், நம் மக்களுக்கு நன்மையும் தீமையும் கலந்தே ஏற்படுகின்றன. இன்னுங் கேட்டால், விஞ்ஞானத்தால் நமக்கு நன்மைகளைவிட தீமைகளே அதிகமாக விளைந்து வருகின்றன. இவ்விதம் கூறுவது மிகைபடக் கூறல் ஆகாது.

இன்று உலகில் எல்லா நாடுகளிலும் வேலையற்றோர் தொகை லட்சக் கணக்கில், கோடிக் கணக்கில் பெருகி ஒருவேளை உணவுக்கும் வழியின்றி வாடி வருந்துகிறார்க ளென்றால், அதற்குக் காரணம் இந்த நவீன கலையாகிய விஞ்ஞான சாஸ்திரமும், விஞ்ஞான சாஸ்திரிகளுமே யாவர். இது மறுக்க முடியாத உண்மையாகும். பல்லாயிரம் பேர் சேர்ந்து செய்துவரும் வேலையை ஒரு சில இயந்திரங்கள் ஒரு நொடியில் செய்து விடுகின்றன. அவ்வித ராக்ஷஸ இயந்திரங்களைச் சிருஷ்டித்தது எது? இந்த விஞ்ஞானமேயன்றோ? மனிதர்கள் வாயில் மண்ணைப் போட்டு அவர்களுக்கு எமனாக வந்துள்ள இயந்திர பூதங்களைச் சிருஷ்டி செய்தவர்கள் யார்? விஞ்ஞான சாஸ்திரிகளே யன்றோ?

இந்த விஞ்ஞான சாஸ்திரிகளும், ரசாயன சாஸ்திரிகளுஞ் சேர்ந்து ஒருவகையில் இன்று உலகைக் குட்டிச் சுவாரக்கி வருகிறார்கள் என்றே சொல்லலாம்.

இன்று யுத்தப் பேய் வசப் பட்டிருக்கும் வல்லரசுகளுக்கும், மற்றும் பல சிறிய தேசங்களுக்கும் நூதன நூதனமான யுத்த தளவாடங்களும், சண்டைக் கப்பல்களும் செய்து கொடுத்து வருபவர்கள் யார்? இந்த பாழும் விஞ்ஞான சாஸ்திரிகளும் ரசாயன சாஸ்திரிகளு மல்லரோ! இவர்கள் மிகத் தீவிரமாக கிர்த்துளி செய்யும் வெடி குண்டுகளையும், விஷப் புகைக் கருவிகளையும், மற்றும் பல கொடிய ஆயுதங்களையுங் கண்டுபிடித்து செய்து தரா விட்டால், வல்லரசுகளும் சிறுதேசங்களும் யுத்த வெறி கொண்டலையுமா? இவ்விதம் உலகத்தைச் சுடுகாடாக்க முயற்சிகள் நடை பெறுமா? சிறிது காலத்துக்கு முன் நடந்து இன்னமும் புகைந்து கொண்டிருக்கும் இத்தாலி—எதியோபியா (அபிசீனியா) யுத்தமும், ஜப்பான் மஞ்சுகோ சண்டையும், இப்போது நடந்து வரும் ஸ்பெயின் உள்நாட்டுக் கலகமுமே இவற்றிற்குப் போதிய உதாரணங்க ளல்லவோ!

இந்த விஞ்ஞான சாஸ்திரிகளாலும் ரசாயன சாஸ்திரிகளாலும் மனித சமூகத்துக்கு நேர்ந்து வரும் அதாவது நன்மைகளை விட —தீமைகள் அதிகமாக இருப்பதை அறிந்துதான், ஆங்கிலப் போராசிரியர் எஸ். ஜி. வெல்ஸ் ஒரு வகையில், விஞ்ஞானத்தைக் கண்டித்து வருகிறார். அவர் தாம் எழுதிய "கண் காணு மனிதன்" (Invisible Man), "நூறு வருடத்துக்குப் பின்னர்" (After Hundred Year's ago) "அதியற்புதஞ் செய்யும் மனிதன்" (The man who could work miracles) முதலிய புத்தகங்களில் விஞ்ஞான ரசாயன சாஸ்திரத்தின் தவறான போக்கைப் பலமாகக் கண்டித்திருக்கிறார். உலகப் பிரசித்தி பெற்ற சினிமா நடிகரான சார்லி சாப்ளின் கூட தாம் எழுதி நடிக்கும் படங்களில் விஞ்ஞான சாஸ்திரிகளின் பைத்தியக்கார தனத்தைப் பரிகாசஞ் செய்திருக்கிறார். சமீபத்தில் சென்னை தியேட்ட ரொன்றில் காட்டப்பட்ட "Modern Times" என்ற படத்தைப் பார்த்தவர்கள் இவ் வுண்மையை அறியலாம்.

அவ்வளவு தூரம் போவானேன்? ஒரு சிறந்த விஞ்ஞான சாஸ்திரியே தற்போதைய விஞ்ஞானத்தின் விபரீதப் போக்கை நன்கு எடுத்துக் காட்டிக் கண்டித்திருக்கிறா ரென்றால், வேறு கூறவும் வேண்டுமோ! சமீபத்தில் மைசூர் வர்த்தக சபையின் ஆதரவில் நடைபெற்ற கூட்டத்தில் தமிழ்நாட்டு விஞ்ஞான சாஸ்திரியான ஸர். ஸி. வி. ராமன் "விஞ்ஞானமும் தொழில் வளர்ச்சியும்" என்பது பற்றிப் பேசினர். அச் சமயம் அவர் தமது சொற்பொழிவில் பின் வருமாறு குறிப்பிட்டார்:—

"இந் நாளில் விஞ்ஞானம் விளைத்த விபரீத மென்ன? குடிசைக் கைத்தொழில்களை ஒழித்து விட்டது; புதிது புதிதான தேவைகளை உண்டுபண்ணி விட்டது. ஒருவன் கையால் செய்யும் ஒரு பொருளைப் பாருங்கள். என்ன அழகாயிருக்கிறது. ஆனல் விஞ்ஞானிகள் கண்டு பிடித்த இயந்திரத்தால் செய்யப்பட்ட பொருள்கள் பார்க்கும் பொழுதே கண்ணை உறுத்துகின்றன. இந்திய மக்களின் சித்திரக் கலை ஆர்வத்தையும் அக் கலையில் அவர்கள் செய்துள்ள அப்பியாசத்தையும் இயந்திரங்கள் அழித்து விட்டன. இதனல்தான் மகாத்மா காந்தி இயந்திர பூதத்தை இகழ்கிறார். இவ் விஷயத்தில் நான் அவரைப் போலவே ஒத்த அபிப்பிராயங் கொண்டுள்ளேன்.

"இப்போதுள்ள விஞ்ஞான சாஸ்திரிகள் தங்கள் கலையைத் துஷ்பிரயோகஞ் செய்கிறார்கள். விஞ்ஞானக் கலையைக் கண்டித்த பழைய நாளில், "கலியாணம் சட்ட பூர்வமான காம இச்சை. இயந்திர சாஸ்திர அப்பியாசம் விஞ்ஞானத்தின் காம இச்சை" என்று ருஷிய தத்துவ ஞானி லியோ டால்ஸ்டாய் சொல்லி யிருக்கிறார்."

நம் நாட்டில் மேனுட்டு நாகரிகத்தில் மோசங் கொண்டவர்களும், வெறும் பகற்கனவு கண்டு கொண்டிருப்பவர்களுமான வாசா கைங் கரியக்காரர்கள் சிலர், விஞ்ஞானத்தின் வாயிலாக பலவிதமான கைத் தொழில்களைப் பெருக்கி விடலாம் என்றும், அத் தொழில் பெருக்கத் தால் நம் நாட்டுமக்களுக்கு ஏராளமான பணங் கிடைத்து விடும் என் றுங் கருதுகிறார்கள். அது தவறு. புதுத் தொழில்களை உண்டாக்கு வதே விஞ்ஞானத்தின் காரியமன்று. அதனால் மனிதனின் தேவை களே அதிகமாகும். தேவைகள் அதிகமாக ஆக, அதற்குரிய செல வும் மனிதனுக்கு அதிகமாகிறது. பணக்காரர்களாயிருந்தால், பணத் தை வாரி யிறைத்து எல்லா தேவைகளையும் பூர்த்தி செய்து கொள்ளுகிறார்கள். சொற்ப பொருள் வருவாயுடைய மத்தியவகுப் பார், தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள முடியாது கஷ்டப்படு கிறார்கள். சிலர் தங்கள் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்வதற் காக வேண்டி, கடன் வாங்கிச் செலவழித்து பின்னர் சொல்லொணு பல இன்னல்களை அனுபவிக்கிறார்கள். பாம ஏழைகளோ என்றால், அவர்கள் சமாசாரம் சொல்ல வேண்டியதேயில்லை. எனவே, விஞ் ஞானத்தின் வாயிலாகப் புதுத் தொழில்களை யுண்டாக்குவதால் நன்மை யொன்றுமில்லை. பொதுவாக, மக்களை வறுமைக் குட்படுத் தாமல் அவர்களது தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குத்தான் விஞ் ஞானம் இருக்கிறது; இருக்க வேண்டுமென்றும் நாம் வற்புறுத்திக் கூறுகிறோம். அவ்விதமன்றி, இந்நாளில் தேவைகளை மேலும் மேலும் பெருக்கிக் கொண்டு போவது பெருங்குற்றமாகும். இதுதான் ஸர். ஸி வி. ராமனது அபிப்பிராயமுமாகும். தேவைகள் பெருகுவதனுல் மற்றொரு சங்கடமுமுண்டு. நமது தேவைகளுக்கு உள் நாட்டில் உற்பத்தியாகும் பொருள்கள் போதா. ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான் முதலிய வெளி நாடுகளிலிருந்தும் தேவையான பொருள்களை வரவழைக்க வேண்டியதாகிறது. இதனுல் நம் நாட்டிலிருந்து ஏராள மான பணத்தை அயல் நாட்டார் சம்பாதிக்கின்றனர். நவநாகரிகத்தில் பித்துகொண்ட நம் மக்கள் அலங்காரப் பொருள்களுக்காக மட்டுஞ் செலவு செய்யும் பணம் லட்சக் கணக்காகவும், கோடிக் கணக்காக வும் வெளி நாடுகளுக்குப் போகின்றன என்பது பத்திரிகைகளில் அவ்வப்போது வெளியாகும் புள்ளி விவரங்களி லிருந்து அறிந்து கொள்ளலாம். ஒரு காலத்தில் பல் வளங்களும் நிரம்பப்பெற்று செழிப்பாக இருந்த நம் பாரத நாடு இன்று மிக வறுமையில் ஆழ்ந்து கிடப்பதற்குரிய பல காரணங்களுள், நமது தேவைகளுக்கு வெளிநாடு களிலிருந்து பொருள்களை வரவழைப்பது முக்கியமான தாகும்.

ஆதலால்தான் பேரறிஞர்களும், பொருளாதார நிபுணர்களும் வெளி நாடுகளி லிருந்து பொருள்கள் வரவழைப்பதை அடியோடு நிறுத்தி, நமது நாட்டிலேயே அவைகளைச் செய்து கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தி வருகிறார்கள். இது விஷயத்தைக் கவனிப்பதற்கு

விஞ்ஞானிகளால்தான் முடியும். விஞ்ஞானிகள் இல்லாவிடில் நமது இப் பிரச்னைகளைத் தீர்க்க முடியாது. ஆனால், அவர்களுக்குத் தகுந்த பக்கபலம் வேண்டும் ஒரு கட்டுப்பாடான ஸ்தாபனமும் தக்க தலைவ ரொருவரும் இருந்து அவர்களுக்கு போதிய உதவி செய்துகொண்டு வரவேண்டும். இத்துடன் வியாபாரிகளுடைய ஒத்துழைப்பும் விஞ் ஞானிகளுக்கு அவசியமாகும். வியாபாரிகள் அவ்வப்போது தங்கள் தேவைகளை விஞ்ஞானிகளுக்குத் தெரிவிக்கவேண்டும். அப்போது தான் விஞ்ஞானிகள் அவ்வச் சமயத்துக்கு வேண்டிய கைத்தொழில் களை யுண்டாக்கி யுதவ முடியும். இதற்கெல்லாம் அடிப்படையாக நம் மக்களிடத்தில் தன்னம்பிக்கையும், தன்மதிப் புணர்ச்சியும் இருக்க வேண்டும். வெளிநாட்டாரால் முக்கியமாக ஐரோப்பியரால்—தான் எல்லாம் செய்ய முடியும்; நம்மால் ஒன்றும் ஆகாது'' என்று நம்மில் பலர் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் எண்ணி வருகிறார்களென் றால் வேறு சொல்லவும் வேண்டுமோ? இவ்வித அவநம்பிக்கையை நம்மவர்கள் விட்டு நன்னம்பிக்கையையும் சுயமரியாதை உணர்ச்சியுங் கொள்ளவேண்டும் என ஸர். ஸி. வி. ராமன் தமது பிரசங்கத்தில் வற்புறுத்தி யிருக்கிறார்.

இந்தியாவில் எவ்வளவோ பொருள்களை உற்பத்தி செய்யலாம். ஆனால் அம் முயற்சியில் எல்லோரும் கலந்துகொண்டு தீவிரமாகப் பாடு படவேண்டும். இப்போது நம் நாட்டுக்குத் தேவையான பொருள்கள் எவை? சாதனப் பொருள்கள் எவ்வளவு தூரங் கிடைக் கின்றன? அவற்றைக் கொண்டே நமக்குத் தேவையான சாமான் களை உற்பத்தி செய்ய முடியுமா? சிக்கனமாகச் சாமான்களைச் செய்து சொற்ப விலைக்கு விற்க முடியுமா? என்பன போன்ற விஷயங்களை ஆராய்ந்து ஒருதிட்டம் வகுத்து வேலை செய்யவேண்டும்.

இவ்விதத் திட்டம் போட்டு வேலை செய்தால், நாம் விரும்பிய பொருள்களை நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்ளலாம் என்று ஸர். ஸி. வி. ராமன் பின் வருமாறு கூறுகிறார்:—

"வருடத்துக்குப் பத்து லட்சம் ரூபாயும் பத்து வருட அவகாச மும் சுதந்திரமும் எனக்குக் கொடுங்கள். கைத் தொழில் விஷயத்தில் ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியைப் போக்கி விடுகிறேன். சண்டைக் கப்பல் முதல் குண்டூசி வரை இந்தியாவிலேயே செய்து குவித்து விடுகிறேன்."

ஸர். ஸி. வி. ராமனது வேண்டுகோள் வெகு விரைவில் நிறை வேற இறைவன் அருள் புரிவாராக, நமக்குத் தேவையான பொருள் களை நம் நாட்டிலேயே செய்து கொள்ளும் வல்லமையும் நிலைமையும் வெகு விரைவில் ஏற்பட வேண்டுமென்று நாம் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் ஸத்.

# நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்.

## 23-வது ஆண்டின் முன்னறிக்கை.

நிகழும் ஈஸ்வர வருஷம் ஆடித் திங்கள் 1-ம் தேதி 16-7-37 நமது 'ஆனந்தபோதினி' மாத சஞ்சிகைக்கு 23-வது ஆண்டு பிறக்கப் போகிறது. தமிழ் மக்களின் அன்பும் ஆதரவும் பெற்று நீண்ட நாட்களாக நின்று நிலவும் மாத சஞ்சிகைகளில் இது முதன்மை வாய்ந்ததாகும். மக்கள் வாழ்க்கை எல்லாத் துறையிலும் செழித்தோங்குமாறு செய்வதே "ஆனந்தபோதினி"யின் தனிப்பெரும் நோக்கம். வரப் போகும் 23-வது ஆண்டு முதல் வழக்கப்படி தமிழ் நாட்டில் பெரும் புகழும் பெற்று விளங்கும் தமிழ்ப்போறிஞர்: சமயப் போறிஞர் கட்டுரைகளும், புத்தம் புதிய அறிவூட்டும் ஏனைய கட்டுரைகளும் "போதினி"யை அலங்கரித்து எல்லாருக்கும் மகிழ்வூட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகின்றோம். ஆதலால் "ஆனந்தபோதினி"யின் பால் அன்பு பூண்டு ஆதரித்து வரும் சகோதர சகோதரிகள் எல்லாரும் 23-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளது ஈஸ்வர வருடம் ஆனித் திங்கள் 31-ம் தேதி 14—7—37க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்கட்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டுகின்றோம் சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. பி. அனுப்புவதால் தபாற் செலவு 4 அணா மணியார்டர் கமிஷன் 2-அணா ஆக 6.அணா அதிகச் செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் காலதாமதமும் ஏற்படும். ஆகையால் எல்லாரும் மேற்குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் உங்கட்கும் எங்கட்கும் இலாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்கு மேல் வி. பி.யை நிறுத்தி வைக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணா வீதம் தபால் தலை வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் பத்து நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள. இந்தச் சங்கடங்களை யெல்லாம் உத்தேசிக்கும் போது எல்லாரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நன்மை என்று தோன்றும். சிங்கப்பூர், பினங்கு, பர்மா போன்ற வெளி நாடுகளுக்கு வி. பி. யே கிடையாது.

குறிப்பு:-முன்பணம் அனுப்புவோர் பழைய சந்தாதார்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா எண்ணைக் குறிப்பிட்டு "23-வது ஆண்டுக்கு" என விவரம் எழுதவேண்டும். புதிய சந்தாதார்கள் "புதிய ஆண்டுக்கு" என்று விவரம் எழுதவேண்டும்.

## இனம்! இனம்!! இனம்!!!

சந்தாத் தொகையை மேற் குறிப்பிட்ட தேதிக்குள் அனுப்புகிறவர்களுக்கு எங்களது அடுத்த வெகுதானிய வருஷ "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம் ஒன்று இனமாக அனுப்பப்படும். மானேஜர்.




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(93-ம் பக்கத் தொடர்ச்சி.)

16-வது சூத்திரம். அவதாரிகை:—காரிய காரணங்களின் அனன்னியத் தன்மை மீண்டும் வேறு யுக்தியால் நிரூபிக்கப்படுகிறது.

சூ. 16. "ஸத்த்வாச்சாபரஸ்ய"

பதவுரை:—அபரஸ்ய=காரிய வடிவமான இப் பிரபஞ்சத்திற்கு, ஸத்வாச்ச=உற்பத்திக்கு முன் காரணவடிவமாக இருப்பு இருத்தலாலும் (காரிய காரணங்கள் அனன்னியங்களே.)

கருத்து:—பரம் காரணம்; அபரம் காரியம்; காரிய வடிவமான இந்தப் பிரபஞ்சம் சிருஷ்டிக்கு முன் தன் காரண வடிவமான பிரம்மமாக இருந்த தென்று சுருதி கூறுவதால் அது பிரம்மத்தினும் வேறு பட்டதன்றென்பது அறியப்படுகின்றது.

எந்தப் பொருள் எதனிடத்து காரண வடிவத்தோடிருப்ப தில்லையோ அந்தப் பொருள் அதிலிருந்து தோன்ருது. திருஷ்டாந்தமாக:—மணலிலிருந்து எண்ணெய் தோன்றுவதில்லை. ஏனெனில், காரிய வடிவப் பொருளாகிய எண்ணெய், மணலாகிய பொருளினிடத் தில்லாமையால் தோன்றுவதில்லை. "மண்ணினின்று குடம்"—காரியப் பொருளாகிய குடம் தன் உற்பத்திற்கு முன் தன் காரணமாகிய மண்ணிலிருப்பதனுல் தோன்றுகின்றது. காரணப் பொருளிலில் காரியத்தின் தன்மை இல்லா விட்டால் அக் காரணத்தினின்று அக் காரியம் தோன்றுவதில்லை. எனவே, காரியமானது தனது உற்பத்திககு முன்பு காரணத்தில் ஒரே சத்தையா யிருத்தலால் அக் காரியமானது காரணத்தினும் வேறன்று.

17-வது சூத்திரம். அவதாரிகை:— "அஸதேவேதமக்ர ஆஸீத்" (பிரம்மம் இல்லாமலிருந்தது.) முதலிய சுருதி வாக்கியங்களிலுள்ள "அஸத்" என்னும் பதத்தால் "சிருஷ்டிக்கு முன்பு இந்தப் பிரபஞ்சம் சூனியமா யிருந்தது" என்று சொல்லப் பட்டிருத்தலால் காரணத் தன்மை யுடையதாக இப் பிரபஞ்சம் சிருஷ்டிக்கு முன்பு இருந்தது எனக் கூறும் சத்வாதம் சரியன்று என வரும் பூர்வபக்ஷம் மறுக்கப்படுகின்றது.

ஸூ. 17. "அஸத்வ்யபதேசாந்நேதிசேந்ந, தர்மாந்தரேண வாக்ய சேஷாத்."

பதவுரை:—அஸத்வ்யபதேசாத்=சிருஷ்டிக்கு முன் அஸத் வியவகார மிருத்தலால், ந=அப்பொழுது காரியத்திற்கு உள்ளதாந்தன்மை இல்லை; இதி சேத்=என்று இவ்வாறு கூறுவாயானால், ந=அது சரியன்று; ஏனெனில், வாக்ய சேஷாத்=அந்த வாக்கியத்தின் பிற் பகுதி வாக்கியத்தால் தர்மாந்தரேண=வேறு வடிவத்தோடு (அதாவது அவ்யக்த (வெளிப்படாத) வடிவத்துடன்) சிருஷ்டிக்கு முன்பு அது இருந்ததாகக் கூறப்பட்டிருத்தலால்,

கருத்து:—'அஸதேவேதமக்ர ஆஸீத்' என்னும் வாக்கியத்தில் எந்தப் பதார்த்தம் 'அஸத்' என்று கூறப்பட்டதோ அதுவே, 'தத்ஸதாஸீத்' என்னும் வாக்கிய சேஷத்தில் (அந்த வாக்கியத்தின் பிற் பகுதியாக விடப்பட்ட வாக்கியத்தில்) 'தத்' என்னும் பதத்தால் கூறப்பட்டு 'அது சத்தே' யாய் இருப்பதாக போதிக்கப்பட்டது. இங்கு 'அசத்' என்னும் பதத்திற்கு அத்தியந்த அசத்துவம் (முழுதும் இன்மை) அர்த்தமன்று. விகாரப் படாத (அவ்வியாகிருத) நாமரூபத்தன்மை யடையா தென்பதே கருத்தாம். 'சத்' என்னும் பதமும் அப்படியே பிரம்ம பரமாகவும் வியாகிருத (விகாரப்பட்ட) நாமரூப பரமாகவும் பொருள் படும். எனவே, இந்தப் பிரபஞ்சம் வெளிப் படுவதற்கு முன்பு இல்லாததைப் போல (அவ்வியக்தமாக அதாவது வெளிப் படாததாக) இருத்தலால், அசத் என்னும் பதத்தால் குறிப்பிடத் தக்கதா யிருந்தது. ஆகையால், இந்த சுருதி வாக்கியங்களிலுள்ள 'அசத்' என்னும் பதத்திற்கு சூனியம் என்பது பொருளன்று; சிருஷ்டிக்குப் பின் விகாரப் பட்ட நாம ரூபங்களை யுடைய பிரபஞ்சம், சிருஷ்டிக்கு முன்பு வேறு வடிவத்தோடு அசத் எனச் சொல்லத் தகுந்ததா யிருந்த தென்பதே அதன் கருத்தாம் எனக் கொள்க.

18-வது சூத்திரம். அவதாரிகை:—முன் சூத்திரத்தில் வாக்கிய சேஷத்தை யொட்டி அசத் என்னும் பதத்திற்கு அவ் வியாகிருத பரமாக அர்த்தம் செய்யப்பட்டது. ஏன் அவ்வாறு பொருள் கொள்ள வேண்டும்? வாக்கியத்தின் முற் பகுதியை யொட்டியே பிற் பகுதிக்கு ஏன் பொருள் கொள்ளலாகாது? என்று பூர்வ பக்ஷிகள் ஆக்ஷேபிக்கின்றனர். ஆகலின், வேறு காரணத்தால் காரியத்தின் இருப்பிற்கு அனன்னியத் தன்மை காட்டப் படுகின்றது.

ஸூ. 18. "யுக்தேஸ் சப்தாந்தராச்ச"

பதவுரை:—யுக்தேః=யுக்தி யிருத்தலாலும், சப்தாந்தராச்ச=வேறு சுருதி வாக்கிய மிருத்தலாலும் (காரியத்தின் இருப்பும், காரணத்தினின்றும் அனன்னிய மென்பதும் பெறப்படுகின்றது.)

கருத்து:—தயிர் குடம் இவற்றி னிருப்பால் அவற்றிற்கு இன்றியமையாத காரணங்களாகிய பாலும் மண்ணும் கிரகிக்கப் படுகின்றது. ஆனால், தயிரின் இருப்பால் மண்ணும், குடத்தி னிருப்பால் பாலும் பெறப்படுவதில்லை. ஆகலின், தயிர் குடம் இவற்றிற்கு காரணமாகவுள்ள வஸ்துக்களுக்

காகவே பிரயத்தனம் செய்யப் படுகின்றது. ஆகவே, ஒவ்வொரு காரியமும் தன் தன் காரணத்தினிடத்து அபின்னமாக விருக்கின்ற தென்று விளங்குகின்றது. இப்படியே காரிய வடிவமான இந்தப் பிரபஞ்சம் காரண வடிவமாகிய பிரம்மத்தில் அபின்னமாக இருக்கின்ற தென்பது உறுதிப் படுகின்றது.

19-வது சூத்திரம். அவதாரிகை:—மேற் சொன்ன விஷயமே மீண்டும் உறுதிப்படுத்தப் படுகின்றது.

சூ. 19. "படவச்ச"

பதவுரை:—படவத்—ச=மடிப்பு விரிப்பு ஆடை நியாயத்தால் (காரியம் காரணத்தினும் அனன்னியம்.)

கருத்து:—மடித்தாலும் விரித்தாலும் ஆடை ஒன்றே யல்லவா? அப்படியே காரணமாக விருக்கும் நிலையிலும் காரியமாக விருக்கும் நிலையிலும் பிரம்மம் ஒன்றே.

20-வது சூத்திரம். அவ்தாரிகை:—காரியமானது காரணத்தினும் அபின்னமானால் காரியத்திலுள்ள பிரயோஜன மெல்லாம் காரணத்திலும் இருக்க வேண்டு மல்லவா? அப்படியிருப்பதில்லையே என்று பூர்வபக்ஷிகள் ஆக்ஷேபிக்கின்றனர். இதற்குச் சமாதானம் சொல்லப் படுகின்றது.

சூ. 20. "யதாசபிராணாதி:"

பதவுரை—ப்ராணாதி:=பிராணாபானாதிவாயுக்கள், யதாச=எவ்வாறோ (அவ்வாறே ஒன்றாகிய பிரம்மம் நாநாத்தன்மையை யடைகின்றது.)

கருத்து:—ஒரே வாயுவானது ஸ்தான பேதத்தால் பிராணன் அபானம் முதலாகிய ஐந்து பேதங்களை யடைந்து, எப்படி வெவ்வேறு பிரவிருத்திகளை யுடையதா யிருக்கின்றதோ, அப்படியே ஒன்றாகிய பிரம்மமும் மாயோபாதிகளால் நாநாத் தன்மையை யடைந்து பிரபஞ்ச பாவத்தையுடையதாகின்றது. பிராணன் அபானன் முதலாகியவை எப்படி வாயுவினும் அனன்னியமோ, அப்படியே, பிரபஞ்சமும் பிரம்மத்தினும் அபின்னமாயிருக்கின்றது.

## 7-வது. இதரவ்யபதேசாதிகரணம்.

21-வது. சூத்திரம். அவதாரிகை:—முந்திய அதிகரணத்தில் ஜீவன் பிரம்மத்தினும் அபின்ன னென்றும், பிரம்மம் ஜகத்காரண மென்றும் ஏற்படுகின்றது. அப்படியானால், பிரம்மத்திற்கு, இதமான காரியத்தைச் செய்யாமையும் அகிதமான காரியத்தைச் செய்வது மாகிய தோஷங்கள் சம்பவிக்குமே என்று பூர்வ பக்ஷிகள் செய்யும் சங்கை காட்டப் படுகின்றது. இது பூர்வ பக்ஷ சூத்திரம்.

சூ. 21. இதரவ்யபதேசாத்திதாகரணாதி தோஷப்ரஸக்தி:"

பதவுரை:—இதரவ்யபதேசாத்=ஜீவனுக்குப் பிரம்மா பின்னத்துவ உபதேசத்தால் (அதாவது—பிரம்மத்திற்கே ஜீவத்துவ வியவகாரத்தால்),

ஹிதாகரணாதி தோஷ ப்ரஸக்தி:—சிருஷ்டியில் ஹிதகரண தோஷம் சம்பவிக்கும்.

கருத்து:—"ஸ ஆத்மா தத்வமஸி ச்வேத கேதோ" என்னும் வாக்கியத்தால் ஜீவனே பிரம்மமாயிருப்பதாக போதிக்கப் பட்டது. வேறு "இந்த ஜீவ சொரூபமாக நான் சரீரத்தில் பிரவேசித்து நாம ரூபங்களைச் செய்கின்றேன்." என்பது போன்ற வாக்கியங்களால், பிரம்மமே ஜீவத்வ விவகாரத்தைப் பொருந்தினதாகப் போதிக்கப் பட்டது.

இதில், முதல் பக்ஷத்தில் ஜீவனுக்குப் பிரம்ம பாவம் சம்பவித்துப் பிரம்மத்திற்குள்ள சிருஷ்டி கர்த்தா வாகுந்தன்மை அவனுக்கு சம்பவிக்கின்றது. இப்படி சுதந்தர கர்த்தருத்துவம் சித்திப்பதால் அவன் தனக்கு இதமாகிய (நன்மையாகிய) சிருஷ்டியையே செய்துகொண் டிருக்க வேண்டுமே யன்றி, அகிதமாகிய பிறப்பு இறப்பு மூப்பு பிணி முதலிய பல வகைத் துன்பங்களைச் சிருஷ்டித்துக் கொண்டிருக்கலாகாது. எவனாவது தனக்குத் தானே பந்தத்தைத் யுண்டாக்கிக் கொண்டு அதில் பிரவேசிப்பானா?

பரமாத்மாவே ஜீவனானென்று கூறும் பக்ஷத்தில் அத்தியந்த நிர்மலனாக வுள்ளவனுக்கு அத்தியந்த மலினமாகிய தேகத்தினிடத்தில் ஆத்ம பாவம் நேர்ந்ததாக ஏற்படும். ஒரு வேளை அவ்வித பாவம் நேர்ந்தாலும், அது துக்கரமென்று அறிந்த வுடனே அதனை அவன் விட்டு விடுவான். ஆனால் அவன் அப்படிச் செய்வதில்லை. இத்தகைய தோஷங்கள் சம்பவிப்பதால் பிரபஞ்சம் சேதனத்தின் காரிய மெனச் சொல்வது நியாயமற்ற வாதமாகும்.

22-வது சூத்திரம். அவதாரிகை:—மேற் காட்டிய பூர்வ பக்ஷம் மறுக்கப்படுகிறது.

சூ. 22. "அதிகந்து பேத நிர்தேசாத்."

பதவுரை:—பேத நிர்தேசாத்=ஈசுவரனை விட ஜீவன் வேறு என்று விவகார தசையில் நிச்சயிக்கப்பட் டிருத்தலால், அதிகம்=ஜீவனை விட ஈசுவரன் மேலானவன், து=ஆகையால் பூர்வ பக்ஷம் சரியன்று.

நித்திய சுத்த புத்த முக்த சுபாவ முடையவனும், சர்வஞ்ஞனும், சர்வ சக்தனும், ஜீவனை விட மேலானவனுமாகிய பரமாத்துமா ஜகத்தைச் சிருஷ்டிப்பவன் என்று சொல்லப்பட்டது. அவனிடத்தில் இதத்தைச் செய்யாமை முதலிய தோஷங்கள் சம்பவியா. நித்திய மூக்தனாகலின் அவனுக்கு செய்யத் தகுந்ததாகிய இதம் என்பதில்லை; நீக்கத் தகுந்ததாகிய அகிதமுமில்லை. சர்வஞ்ஞனும் சர்வ சக்தனுமாகலின் அவனுக்கு ஜீவனிடத்துள்ளவைகளாகிய கிஞ்சிஞ்ஞத்துவம் அற்ப சக்தித்துவம் முதலிய தோஷங்களும் சம்பவியா.

ஜீவன் இத் தன்மையானவ னல்லன். அவன் ஜகத்திற்குக் கர்த்தாவாயிருந்தால் மேலே பிரதி பக்ஷிகள் கூறும் தோஷங்கள் சம்பவிக்கும்; ஆனால், அவன் (ஜீவன்) ஜகத் கர்த்தா வென்று எங்கும் கூறப்பட்டிருக்க வில்லையாகலின், அத் தோஷங்கள் சம்பவியா.

பரமேசுவரன் ஜகத்கர்த்தா வென்றும் அவனைவிட ஜீவன் வேறென்றும் சுருதிகள் போதிக்கின்றன. ஈசுவரன் உபாசியன் (உபாசிக்கப் படத்தக்கவன்) என்றும், ஜீவன் உபாசிப்பவன் என்றும் சுருதிகள் கூறுகின்றன. இதனாலேயே, ஈசுவரன் ஜீவனை விட மேம்பட்டவன் என்றும், ஜீவனிடத்துள்ள கிஞ்சிஞ்ஞத்வம் முதலிய தோஷங்கள் அவனிடத்து இல்லை யென்றும் விளங்க வில்லையா?

(இவ்வாறு கூறப்பட்ட கர்த்தாவும் காரியமும் பேதம் என்னும் நிச்சயம். 'தத்வமசி'' முதலிய வாக்கியங்களால் கூறப்பட்ட அபேத நிச்சயத்தைப் பாதிக்காது என்பது இதற்கு முன்பு சொல்லப்பட்ட மகாகாச கடாகாச திருஷ்டாந்தத்தால் தெரிந்து கொள்ளத் தக்கதாகும். எப்போது "ப்ரஹ்மாஹமஸ்மி'' என்னும் அனுபவம் உண்டாகின்றதோ, அப்போது ஜீவனுக்கு ஜீவத்தன்மையாவது, ஈசுவரனுக்கு சிருஷ்டிகத் தன்மையாவது பொருந்துவதில்லை. அவ்வித ஏகத்துவஞானம் உண்டான மாத்திரத்திலேயே மித்யாஞானத்தா லுண்டாகும் பேத விவகார மெல்லாம் நசித்து சிருஷ்டியே இல்லாமற் போகின்றது; ஆகவே, இதத்தைச் செய்து கொள்ளாமை, அஹிதத்தைச் செய்து கொள்ளல் என்று பூர்வ பக்ஷிகள் கூறும் தோஷங்களும் இல்லையாகின்றன.



# ஈசுவர வருட வாழ்த்து

(குமாரமங்கலம்—மு. சண்முகம்)

பொங்கும் மங்களம் எங்கும் பெருகிடப் பூத்தது புத்தாண்டே
தங்கு பெரும்புகழ் எங்கும் வளர்த்திடச் சார்ந்தது புத்தாண்டே
இங்கு நந்தமிழர் இன்புறக் கூடி எதிர்கொண் டழைத்திடுவோம்
ஈண்டு வருகநீ ஈண்டு வருகநீ என்றிங் கழைத்திடுவோம்
தண்டமிழ்த் தாயின் தனிப்பெருஞ் சீர்மையை சாற்றிப் புகழ்ந்
[திடுவோம்
சாற்றுவ தோடன்றி ஏற்றம் பெறத்தொண் டாற்றி மகிழ்ந்
[திடுவோம்
சங்கங் கூட்டுவோம் தாய்ப்புகழ் நாட்டுவோம் தண்மை வளர்த்
[திடுவோம்
தமிழர் யாவரும் தண்டமிழ் ஆண்டிதில் தழைத்திட வேண்டிடு
[வோம்
'தாய்மொழி வாழிய தாய்மொழி வாழிய' என்றே பாடிடுவோம்
நலந்தரு பயனை நல்கிட ஈசனை நன்கு வணங்கிடுவோம்
நண்ணும் ஈசுர நல்வரு டமிதை நம்மிறை வந்ததென
நாடி நல்லின்பங் கூடிக் குலாவியே நன்கனம் வாழ்ந்திடுவோம்
'வாழி ஈசுர வாழி யீசுர வாழி'யென் றேத்திடுவோம்.

## புத்தாண்டு பெருமகிழ்ச்சி

மலர்ந்தது ஈசுர மகிழ்புத் தாண்டே
மலர்ந்தது தமிழர்கள் மாண்புறு வாழ்வே
மலர்ந்தது தமிழ்மொழி வளர்திரு வாண்டே
மலர்ந்தது நம்முளம் மலர்ந்தது மகிழ்வே
வாழிய தமிழ்மொழி வாழிய தமிழர்
வாழிய பெண்கள் வாழிய இளமகார்
வாழிய நண்பர் வாழிய புலவர்
வாழிய சுற்றம் வாழிய பலரும்
வளர்கநங் கல்வி வாழிரு பாற்கும்
நாட்டுப் பற்று நன்கனம் ஓங்குக
வீட்டு ச்சியினில் விளங்குக கொடியே
நாட்டன் பினர்கள் நல்லாற் றுனே
மக்கள் பலர்க்கும் வளர்நன் மைபல
ஆக்கு முறைப்பில் ஊக்கம் பெறுக!
இத்திரு ஈசுர எழிலார் ஆண்டில்
இந்திய நாடு எல்லாத் துறையிலும்
முந்திய பெருமையின் முந்தி யுலகின்
முதன்மை பெறுமா முதன்மை
யுடையான் கழலே உவந்தேத் துவமே.




**அறுவகையாக நிறமாறும் மலர்கள்.**

மெக்ஸிகோவில் ஒரே தினத்தில் வெள்ளை, ரோஜா, சிவப்பு, தாமிரம் (கருப்புஞ் சிவப்புங் கலந்தது) ஊதா, நீலம் ஆகிய ஆறுவித வர்ணங்களாக மாறக் கூடிய மலர்கள் மலர்கின்றனவாம். இம் மலர்களின் இயற்கையைத் தாவர சாஸ்திர நிபுணர்களாலுங் கண்டுபிடிக்க முடியவில்லையாம்.

* * * *

**புலிக்குக் கலியாணம்.**

பிரிதிம்பாஷா எஸ்டேட் சொந்தக்காரர் தாம் வளர்த்து வந்த ஒரு பெண் புலிக்குக் கலியாணஞ் செய்துவைக்க விரும்பி ஆண் புலி யொன்றை விலை கொடுத்து வாங்கி 2000 ரூபாய் செலவு செய்து இரண்டுக்குங் கலியாணஞ் செய்தாராம். அக் கலியாணத்தை யொட்டி ஆடம்பரமான விருந்தொன்றும் நடத்தப்பட்டதாம்.

* * * *

**மந்திரவாதி வயிற்றில் இரும்புக்கடை.**

ராவல்பிண்டியைச் சேர்ந்த ஒரு பிரபல மந்திரவாதிக்குப் பம்பாய் செயிண்ட் ஜார்ஜ் ஆஸ்பத்திரியில் ஆபரேஷன் நடந்தது. டாக்டர்கள் மந்திரவாதியின் வயிற்றை அறுத்த போது, வயிற்றினுள் 18 பேனாக் கத்திகளும், மற்றுஞ்சில இரும்புச் சாமான்களும் இருந்ததைக் கண்டு ஆச்சரியப் பட்டு அவற்றை வெளியேற்றினராம். இம் மந்திரவாதி பேனாக் கத்திகளை விழுங்கும் ஜால வித்தையில் மிகத் தேர்ந்தவராம். இவ் வித்தை செய்கையில், ஏற்பட்ட ஏதோ தவறினால் வயற்றில் கோளாறுண்டாயிற்றாம். அவ் வலியைப் போக்கிக் கொள்ளத் தான் அவர் ஆபரேஷன் செய்து கொண்டாராம்.

* * * *

**ஆணினத்திலும் பிரசவமா!**

ஜீவராசிகளில் பெண்ணினந்தான் பிரசவத்துக்கு ஏற்றதாக இயற்கையமைத்திருப்பதை நாம் அறிந்திருக்கிறோம். ஆனால், ஆணினத்திற்குப் பிரசவம் உண்டு என்பது நாம் கேட்டறியாத புதுமையாகும். 'ஹிப்போஸ் காம்ப்ஸ்' என்பது நீர் வாழ் பிராணிகளில் ஒன்றாகும். இதனை நீர்க் குதிரை எனக் கூறுவது வழக்கம். அப் பிராணிகளில் ஆணினமே கர்ப்பமிருந்து குட்டி போடுகின்றனவாம்.

* * * *

**காகிதக் கைக் குட்டைகள்.**

காகிதத்தால் இப்போது கைக் குட்டைகள் செய்யப்படுகிறது. அக் காகிதக் கைக் குட்டைகளைப் பலர் சகஜமாக உபயோகிக்கத் தொடங்கிவிட்டனர். இவை ஆரம்பத்தில் சலவைக்குப் பின் பயன் படுவதில்லை. இப்போது வரும் கைக் குட்டைகளோ சலவைக்குப் பின்னும் உபயோகிக்கக் கூடிய தகுதியுடையனவா யிருக்கின்றன. சலவைக்குப் பின்னர் தான் அவை மிருதுவாகவும், வழவழப்பாகவும் இருக்கின்றனவாம்.




பிரிட்டனில் மொத்தம் 20,165 ரயில்வே இஞ்சின்க ளிருக்கின்றன வாம்.

* * * *

பூமியில் தினந்தோறும் ஏறக் குறைய 27,50,000 டன் மழை பெய்கி றது. ஆலங்கட்டி மழை விநாடிக்கு 70 அடி வேகத்தில் பெய்கிறதாம்.

* * * *

ஒரு தேனீ ராணி பருவ மொன்றுக்கு ஒரு லட்சம் முட்டை யிடுகிற தாம்.

* * * *

கொசுவுக்கு 22 பற்கள் இருக்கின்றனவாம். பூதக்கண்ணாடி கொண்டு பார்த்தால் அவை நன்றாகத் தெரியுமாம்.

* * * *

'காட் லீவர் ஆயில்' என்றால் பெரும் பாலாருக்குத் தெரியும். 'காட்' என்னும் ஒருவகை மீனிலிருந்து எடுக்கும் அத் தைலத்தைப் பலமற்றவர்க ளுக்கு டாக்டர்கள் சிபார்சு செய்கிறார்கள். அவ்வித மீன் ஒன்றின் வயிற்றில் 80 லட்சம் முட்டைக ளிருந்தனவாம்.

* * * *

விளக்குகளை அலட்சியமாக எரிய விட்டதால், லண்டனில் ஒரு வரு ஷத்தில் 1294 தீ விபத்துகள் ஏற்பட்டனவாம்.

* * * *

உலகில் 25 கோடி மக்கள் வாரந்தோறும் சினிமாவுக்குப் போகிறார்க ளாம். அமெரிக்காவை மட்டும் எடுத்துக் கொண்டால் 7½ கோடி மக்கள் பிரதி வாரமும் சினிமாவுக்குப் போகிறார்களாம்.

* * * *

ஐஸ்லந்தில் வியாபாரம் தொழில் முதலியன கிடையாதாம். ஒவ்வொரு வரும தமக்குத் தேவையான பொருள்களைத் தாமே செய்து கொள்ளல் வேண்டுமாம்.

* * * *

மனிதருடைய இருதயமானது 6 அங்குல நீளமும் 4 அங்குலக் குறுக்கள வும் இருக்கிறது. அது நிமிஷத்துக்கு 70 தரம் துடிக்கிறது. அவ்விதங் கணக் கெடுத்தால் ஒருவரது ஆயுட்காலத்தில் 30 கோடி தடவை அது துடிக் கிறதாம்.

* * * *

ஸெண்டிகிரேட் தெர்மாமீட்டர்கள் பிரான்சில் தான் அதிகமாக உபயோ கிக்கப் பட்டு வருகின்றனவாம்.

* * * *

லண்டன் பிரிட்டிஷ் மியூஸியத்தில் நாடோறும் 100 புஸ்தகங்கள் வீதம் சேர்க்கப்பட்டு வருகிறதாம்.

# மாதர் உலகம்



## ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

மைவிழியார் மனையகல் என்பது அடுத்து வரும் நீதி. இதற்கு "மைதீட்டிய கண்களையுடைய வேசையாது வீட்டை நீ ஒருபோதும் கிட்டாமல் அகன்றுபோ" என்பது பொருள்.

எத்துணை சன்மார்க்க நடையுள்ள ஆண் மகனே யானாலும் மெய்நலம் விற்கும் தொழிலை மேற்கொண்டு வாழ்வு நடத்தும் வேசியர்கள் வசிக்கும் மனைக்கு அருகில் போவதும் அபாயம் என்பது அம்மையார் கருத்து. அத்தகையாரை அணுகுவதும் காண்பதும் பழகுவதும் எவ்வளவு கெடுதி யென்பதை இதிலிருந்தே ஊகிக்கலாம். பெண்களோடு பழகுவதால் என் மன உறுதி சிறிதும் பிறழாது என்று வீரவுரை பேசும் ஆண்மையாளர் எத்தனை எத்தனை கோடி என்றெண்ணவு முடியாது. அவர்கள் தான் பத்தினியானால் தேவ்டியாள் தெருவிலும் குடி யிருக்கலாம் என்னும் பழமொழியை உதாரணமாக எடுத்தும் காட்டுவர். இவர்கள் காட்டும் இவ்வுதாரணம் பெண்பாலார் திறத்தில் வழங்கப்படுவதே யென்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை. உத்தமப் பெண்கள் உள்ளக்கிடக்கைக்கே அம்மொழி அரண் செய்வதாகும். ஆண்பாலார் ஒருபோதும் பெண்மை யுறுதியைப் பெறமுடியாது. பெண்பாலார் நெருப்பாகவும் அவர்களை யணுகும் ஆடவர் மெழுகாகவும் கொள்வது அறிஞர் கண்ட அநுபவ உண்மை. இயற்கையில் நல்ல சுபாவமுள்ள விலைமாதர்களும் பலர் இருப்பினும் அவர் தம் கூட்டுறவும் குலமகனுக்குப் பெருந் தீங்கையே பயக்கும். இதை விளக்க வந்த நூலே சிலப்பதிகாரம் என்று கொள்ளுதல் இழுக்கன்று. கோவலன் கொடியவனா? மாதவி கொடியவளா? இரண்டும் இல்லை. இருந்தும் கோவலன் குடிநலம், வாழ்க்கை வளம் எவ்வாறு நாசமாகியது. தன்னை விரும்பிவந்த ஆடவனை வசப்படுத்துவதே தமது முதற்பாடமாக சங்கற்பம் செய்து கொள்ளும் சாதுரியமுள்ள விலைமாதர்களை வென்று வெளிவந்தவர்கள் பல கோடியில் ஒருவர் கிடைப்பதரிது. ஆயிரம் போர் வீரரை அமர்க்களத்தில் வெட்டிச் சாய்த்த சுத்தவீரனும் [illegible] கடைவாய்தலில் அடிமையாவான் என்னும் இயற்கை யுண்மையைக் குறிப்பாலுணர்த்துவதே பரணி என்னும் பிரபந்தத்தின் நோக்கமாகும். "தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ" என்றருளினர் பரஞ்சோதி முனிவரும். நிலையி னிழிந்த மாந்தர் தலையி னிழிந்த மயிர் அனையர் என்றறைந்தனர் பொய்யாமொழிப் புலவரும். "காமத்தில் மனதானுற் கொள்ளும்

பெண்டொடு கலவிசெய்'' என்றனர் கைவல்லிய ஆசிரியரும். 'பழக்கம் கொடியது பார்; பாறையினும் கோழி கிழிக்கும்; பொலிவைக் கிளறும்' என்றனர் ஒழிவிலொடுக்க நூலாரும். ஆதலினால் பழக்கத்திற்குச் சிறிதும் இடம் ஏற்படும்படி நடவாதே என்றுணர்த்தினர் ஔவையார். இயற்கையை வெல்லக்கூடிய மனவுரம் ஒரு சிலருக்கு இருக்கக் கூடுமென எண்ணவு முடியாது. அவ்வா றிருப்பரேல் இத்துணைக்காலம் கழிந்தும் இராமன் புகழ் மலை விளக்காகப் பொலிய வேண்டியதேயில்லை.

இந் நீதிக்கு ஒப்பான நீதி வேறில்லை. மைதீட்டுதல் வேசையர்கட்கே விசேட அடையாள மென்பதும் இதனாற் பெறப்படுகின்றது. இங்கு மைதீட்டுதல் இளங்குழவிகளுக்குக் கண்களில் சூடு ஏறாமல் குளிர்ச்சி யுண்டாக்கும் நோக்கத்தோடு தீட்டப்படுவதைச் சுட்டியதன்று. பரபுருடர் தங்களைக் குலமாதரினும் வேறாக வுணர்ந்துகொள்ளுவதற்கு அநுகூலமாகத் தீட்டப்படும் வியாபாரக் குறியாகவும் கொள்ளலாகும். தவிரத் தங்கள் விழிகளை விசாலமுள்ளதாகக் காட்டுவதற்கும் அழகுபடுத்துவதற்கும் ஏற்ற சாதனமாக அம் மையைத் தீட்டுவதாகக் கொள்ளுவதும் பொருந்தும். இவைகளல்லாமல் கண்டோரை வசீகரிக்கச் செய்யும் உபாயமாகப் பலர் சில மந்திரவாதிகளின் உதவிகொண்டு தயாரித்த வன்மையுள்ள மூலிகைகளின் சத்துடைய மையை உபயோகிப்பதும் உண்மை. அஞ்சன உதவியால் புதையல்களை எடுக்க முடியுமென்று நம்பிக்கை யுடையவர்களு முண்டு. உத்தியோகத்திற்கு விண்ணப்பம் போட்டுத் தலைமை அதிகாரியைக் காணப்போகு முன் ஜயவசீகரமையை நாடி நிற்போர் எத்துணை வாலிபர். இதில் ஏமாற்றமே அதிகம். போலி எண்ணமே அனைத்திற்கும் காரணம். எவ்விதமாயினும் விலை மாதர்கள் தம்மை அலங்கரித்துக் கொள்ளுவதையும் அதனால் பரபுருடர்கள் அன்பைச் சம்பாதிப்பதையும் கடமையாகக் கொண்டவர்களாதலினால் மைதீட்டிக் கொள்வது மரபாயிற்று. ஔவையார் விழிக்கு மை தீட்டுவதை முக்கியமாகக் குறிப்பிட்டார். அம்மட்டில் அமையாமல் வழுக்கைப் புருவங்களிலும் மையிட்டுக் கருமை தோன்றப் புனைவிப்பாருமுண்டு. செயற்கைப் பொருள்களால் தமது இயற்கை யழகை மிகுதிப்படுத்த குலமகள் ஒருபோதும் ஒருப்படாள். பிறர் பொருள் கவரும் இழிவான தொழிலை மேற்கொண்டவர்களைப்பற்றி நீதி நூலாசிரியர் வெகு அழுத்தமாக நெஞ்சுரமில்லா இளைஞர்கள் திருந்தும்படி எடுத்துக் கூறியுள்ளார். அவற்றுள்,

''சாமியுனைப் பிரியேனென் றுரைத்துப் பின்பு
அகன்ற மின்னாள் தன்னைநோக்கித்
தோமிலா நின்மாற்றம் திறம்பியது ஏதென்றேன்
நீ தொகுப்பாற் றந்த
சாமியை நீங்கேனென் றேன்கினைச் சொன்ன
தன்று நீசாமி யானால்
பூமியிலுன் மாற்றென்ன இடையென்ன
விலையென்ன புகல்வா யென்றாள்''

என்னும் கவியுமொன்று. இதன்பொருள் ஓர் கணிகை உம்மை யென்றும் பிரிவதில்லை யென வாக்களித்தனள். பிறகு அவ்வாசை நாயகனை முற்றும் புறக்கணித்தாள். தன்னைக் காணவும் இடந் தரவில்லை. நெடுநாள் கடந்து

தற்செயலாக இந்தப் பழைய நாயகன் எதிர்ப்பட்டான். அவன் பழைய மோகத்தால் நீ செய்த வாக்குத் தத்தத்தை மீறியகாரணம் என்னவென்று கேட்கவும், அவ் விலைமாது நீர்தந்த பணமாகிய தெய்வத்தை என்றும் பிரியே னென்று சொன்னதல்லாமல் உம்மைச் சாமியென்று எண்ணிச் சொன்ன தில்லை. நீர் சாமியானால் உமக்கு மாற்று என்ன? எடை யுண்டா? விலை தான் என்ன? ஆதலினால் வாக்குறுதிக்கு நீர் அருகராக மாட்டீர் என்று விடை பகர்ந்தாளாம். இதன் கருத்து நீ கைப் பொருளிழந்து ஏழையாகி விட்டதால் உம்மைக் கைவிட்டேன் என்பதே யாகும். பிரமன் படைப் பிலேயே பெண்மக்களிடம் (இயல்பாக அமைந்து கிடக்கும்) (ஆண்பால் மனதைக் கவரும்) சக்தி அதிகம். இவ்வியற்கைக்குச் செயற்கைத் தந்திரங் கள் துணை செய்வதாகும். ஆகவே நன்மக்கள் அத்தகையார் சமீபம செல் வதை ஒருபோதும் விரும்பார். நமது மூதறிவாட்டி வேசையர்கள் வீடிருக் கும் பக்கம் கூடப் போகவேண்டாமென்று விதித்துள்ளார். வேசையர் குலத்திலும் ஒப்பற்ற நற்குணமுடைய பெண் பிறப்பதுண்டு. காளத்தி புராணத்தில் கண்ட கன்னியர்ச் சருக்கத்தில் குறிக்கப்படும் மாணிக்கவல்லி யின் பெண்களைப்பற்றி யாது கூறுவது? மாதவியின் மகள் மணிமேகலையின் தவப்பெருமை சிறிதா? குலமாதரிலும் கடை கோணும் இழிதகையாளர் பலர் உளர். இக் குழுவினர் வேசையரினும் சமூகத்திற்குக் கொடிய தீங்கிழைப் பவர்க ளென்பதில் தடையில்லை. எக்குலத்தாராயினும் பரபுருடரை நாடுவா ராயின் அவர்கள் அனைவரும் வேசையர்களென்று கூறுவதில் இழுக்கில்லை. கற்புடை மடவாரைக் கடவுளரென்று கொண்டு போற்றுவது நம் பண்டை இந்தியநாட்டின் மரபு. அதுவே புனிதமான புகழுக்கும் பெருமைக்கும் உயர்வுக்கும் மூதற்காரணம். ஒருவன் தேகத்தில் இரத்தம் கெட்டால் எல் லாம் கெடுவதுபோல இளைஞர்கள் தவறானவர்களின் சகவாசத்திற்கு கவ லைக் குறைவால் இடந் தந்தாலும் அத்துடன் அவர் வாழ்வே எல்லாவிதத்தி லும் பாழ்பட்டுச் சிதைந் தொழியுமென்பது திண்ணம். ஏகாந்தத்தில் சதி பதிகளுக்குள் உண்டான பிணக்கில் திருநீலகண்டம் என்று கூறியதற்காகத் தனது வாழ்க்கை முழுதும் இளமை யின்பத்தைத் துறக்கவல்ல சிவபக்தி யுடைய நாயனாரையும் பரத்தையின் வஞ்சவலை உட்படுத்தியதாகச் சரித்திரம் கூறுவதாயின் சாதாரண இளைஞர்கள் ஏமாற்றம் அடைவதில் வியப் புண்டோ? ஆண்மகன் அறத்துறை நிற்க உறுதி கொள்வானாயின் விலைமாதர் இனமென்பதே மறைந் தொழியும். அம்மடவாரின் இழிதொழிலை மறை முகமாகவும் நேர்முகமாகவும் வளர்ப்பவர் நெறிகோணும் ஆடவரே யென் பது விளக்கமானதே. இதுபற்றியே எந்த நாடும் பெருமைப்பட இட முண்டு. ஒழுக்கத்தின் சிறப்பை இந்தியநாட்டைப்போல் அழுத்தமாக வுணர்ந்து வற்புறுத்திய நாடு பிறிதொன்றில்லை. வருடத்திற்கொரு புது நாயகனை மணக்கச் சட்டம் இடந் தருவதாகச் சொல்லும் பிறநாடுகளிலும் இத்தகைய நெறிபிறழும் செயல் சிறப்பாகக் கொள்ளப்படுவதில்லை. கல்வி யிற் பெரியாராகிய கம்பநாடர் தொடக்கத்திலேயே ஏகபத்தினி விரத சீல ராகிய இராமனைத் தோற்றுவித்த கோசலநாட்டின் சிறப்புகளில் முதன்மை ஒழுக்கமே யென்பது தோன்ற முதற்பாட்டில்,

"ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காசலம்பு முலைவர்கண் ணெனும்

பூசலம்பும் நெறியின் புறஞ்செலாக்
கோசலம்."

என்பதையே நினைப்பூட்டினர். நீதிக் கிழவியாரும் வாலிபர் மேம்பாடுற்று விளங்கும் கருணையால் மைவிழியார் மனையகல் என்றருளினர்.

விலைமாதர் மனை யென்பதை மறுகிற் செல்வோர் எளிதாக வுணரும் வண்ணம் அக்காலம் புறச்சுவர்களில் வீட்டின் உபயோகத்தை யுணர்த்தும் (அடையாளங்கள்) சித்திரங்கள் வரையப்பட்டிருப்பது வழக்கம் என்பது ஆராய்ச்சியால் உணரக்கிடக்கின்றது.

அந்தணர் இல்லங்களில் தாமரைப்பூக்களையும் மன்னர்மரபினர் மாளிகைகளில் தும்பைமலர்த் தாரினையும் வைசியர் மனைகளில் முல்லைமலர் மாலிகைகளையும், வைத்தியர் வீடுகளில் சர்ப்பங்களையும் இப்படியே ஒவ்வொரு தொழிலாளருக்குரிய சின்னங்களையும் அவரவர்கள் சித்திரமாக வரைந்து வைப்பது வழக்கத்தி லிருந்தது. தற்காலம் அத்தகைய சித்திரங்களின் பாகுபாடே காண முடியாது. வக்கீல்களையும் வைத்தியர்களையும் தொங்க விடப் பட்டிருக்கும் தொழில் விலாசப் பலகைகளினாலேயே அறிய வசதியுளது. ஆலயங்களின் பொறிகள் மட்டில் பண்டை முறைப்படி செதுக்கப்பட்டு வருகிறது. ஆதலினால் இளைஞர்கள் இன்னார் மனை யென்பதைத் தமது ஆராய்ச்சியொன்றினாலேயே அறிதல் வேண்டும். சமரசஞானம் பொங்கி வழியும் இக்காலத்தில் அத்தகைய அடையாளங்கள் வகுப்பு வேற்றுமைக்கு இடந் தருமெனபதாகக் கிளர்ச்சி யெழவும் கூடும். நல்ல வேளையாக அக் குறிப்புகள் இல்லாதிருப்பது நலமே. அதற்கு வேண்டிய சித்திரக் கலாஞானமே சிதைந்து வருவது கண் கூடு.

இனி "மொழிவதற மொழி" என்பது அடுத்த தொடர். இதற்கு சொல்லப்படும் பொருளை நீ சந்தேக மறத் தெளிவாகச் சொல்லு என்பது பொருளாகும்.

அறிவுடையோர் கூர்ந்து கவனிக்க வேண்டிய விஷயம் இஃது. மிகச் சுருக்கிப் பேசுமிடத்தில் தான் இக் குறைபாடு நேரு மென்பதில்லை. விரிவாகப் பேசுவோர்களிடமும் இக் குறை நேர்வதுண்டு. இன்றேல் வார்த்தை பதினாயிரத் தொருவர் என்ற வழக்குரை வழங்க மாட்டாது. நியாய வாதிகளும், சொற்பொழிவாளர்களும் விரைவில் பலர் கவனத்தைப் பெறுவது தெளிவுபடச் சொல்லும் ஆற்றல் வாய்ப்பினாலன்றி வேறில்லை. சொற்களின் ஜீவநாடி அவை தெளிவு பட வெளிவரும் பொலிவிலேயே கால்கொண்டிருக்கும். செய்யுள்களிலேயும் சிந்தனை சக்திக் கிடந்தரும்படி மயங்கப் பொருள்களை அமைத்துப் புனைவது விரும்பத் தகுவதன்று, கனிந்த கவிவாணர்களின் வாக்கில் மறந்தும் மேலே சுட்டிய கொடுமை தோன்றாது. உபாத்தியாயர்களிடம் தெளிவுபட விளங்கும் திறமை இயற்கையில் இல்லாதிருப்பின் அதைப்போல் வருந்தற்குரிய விஷயம் இருப்பதாக எண்ண முடியாது. இதுபற்றியே கல்விக்கழகு கசடற மொழிதல் என்ற நீதி யெழுந்ததும் மக்களுக்கும் விலங்கினங்களுக்கும் உள்ள பேதம் உள்ளக் கருத்தை வெளியிட முடியும் (மொழியும்) ஆற்றலே. ஆண்டவனால் அளிக்கப்பட்ட அத்தகைய மொழித் திறமை நன்கு பயன்படா தொழியுமாயின், மனிதராய் பிறந்ததனாலாகிய சிறப்பு

மறைந்தொழிந்ததே யாகும். மொழித்திறத்தின் முட்டறுக்க வல்லானே அடைய வேண்டிய எல்லாப் பயனையும் படிப்படியாக அடைவான் என்பது அறநூற்கிழவர் துணிபு. மூதாட்டியார் கூறிய ஒவ்வொரு நீதியும் முடிந்த பயனை யுட்கொண்டு நிகழ்வதே யன்றிச் சிறு பயன் குறித்ததன்று.

சந்தேகம் அற மொழியும் திறமை யுடையவர்கள் சிலரும் உண்மையை மறைக்கும் நோக்கம் உடையவராயின் சந்தேகப் படும்படி பேச நேரலாம். அதற்கும் இடம் தராமல் இது தடை செய்து நேர்மைப் படுத்துவதாகும்.

இனி "மோகத்தை முனி" என்னும் நீதி. இது மன்பதைகள் உயர்வாக எய்த வேண்டிய முக்தி வீட்டின் திறவுகோல் என்று கூசாமல் கூறலாம். மனிதனால் அடக்கியாள்வதற் கருமையானது மோகம் ஒன்று தான். அத்தகைய வன்மை யுள்ள மோகத்தை விடு என்று கூறாமல் முனி என்று கூறியருளினர் அன்னையார். விடுப்பது எவர்க்கும் எளிதல்ல. அதனைக் கோபித்தே ஒழிக்க முயல வேண்டும். இதற்கு நமது பரமஹம்ஸர் ஒரு உதாரணம் கூறுகிறார். அது வருமாறு:- நாம் ஒரு நாயை அன்புடன் நேசித்து வந்தோம். அதில் இழி விருப்பதாக வுணர்ந்து அதனிடம் பழகுவதை விடுகிறோம். அவ்வாறு அந்நாயை நாம் நேசியா விட்டாலும் அது நம்மை விடுவதில்லை. பன் முறையும் வந்து நம்மிடம் அதன் அன்பை வெளியிட்டுக் குலாவுவதை நிறுத்துவதில்லை. அதற்கு மேல் நாம் செய்யத்தக்க உபாயம் அதனைக் கோபித்து அடித்து வெருட்டுவதே யாகும். அப்படி உக்கிரமான கோபத்தை யுபயோகியாமற் போனால் அது நம்மை விட்டு நீங்குவதில்லை. அது போல் மோகமும் நாம் சாந்தமாக அதை விட்டாலும் அது நம்மை விடுவதில்லை. அதனாலேயே அம் மோகத்தைக் கோபித்துத் துரத்தும்படி அம்மையார் உணர்த்துகிறார்.

ஆறுவது சினம் என்று முதலிலேயே போதித்த பெரியார் மோகத்தை முனியும்படி இங்கு கூறுவதை நன்கு சிந்தித்தல் வேண்டும். கோபத்தை உபயோகிக்க வேண்டிய அவசியம் (நம்மை உய்ய விடாமற் றடை செய்யும் கொடிய) மோகத்தினிடம் தான் என்றுணர்த்துகிறார். கூரிய கத்தி தேகத்தில் புரையோடும் பகுதியைக் கீறி அழுகிய பாகங்களை யகற்றிக் குணப்படுத்தும் சிகிச்சையைச் செய்ய இன்றியமையாதது போலக் கோபமும் நம்மை யழிக்கக் கூடிய குற்றங்களைக் களைவதற்கே உபயோகப்படும். அதற்காகவே கடவுள் படைப்பில் கோபம் என்னும் குணம் சிருஷ்டிக்கப் பட்டுள்ளது. அத்தகைய கோபத்தை அனுவசியமாக உபயோகிப்பவர் கூரிய கத்தியை செம்மையான அவயவங்களில் செலுத்தும் அறிவிலிகளுக்கே நிகராவர்.

ஆசையைக் கோபிக்க அறிவுத் திட்பம் இல்லாதவர்களே, அக் கோபத்தைத் தனக்கு அடங்கியவர்கள் மீதும் எளியவர்கள் மீதும் செலுத்திப் பேதையர்களாவர். இல் வாழ்பவனுக்குக் கோபத்தை விடக் கொடிய பகை இல்லை. அது பற்றியே அடக்கிக் கொள்ள வேண்டியது சினமே என ஆறுவது சினம் என்னும் நீதியினால் உணர்த்தினர். துறவறத்தை மேற் கொள்ளும் தகுதியாளருக்கு மோகத்தைப் போன்ற கடும்பகை இல்லை. அதனைத் தயக்க மின்றிச் சாய்க்க இக் கோபமே சிறந்த ஆயுதமாகின்றது.

முனிவர் என்ற துறவிகளின் சிறப்புப் பெயரே அறுபகைகளை முனிந்து வெற்றி பெறுவதில் சிரேஷ்டர்கள் என்பதையே குறிக் கொண் டெழுந்ததாகும். முனிவரர்களின் காவி யுடையும் கோபத்தின் ஓர் சின்னமே யாகும். கோபத்தின் நிறம் சிவப்பாதலின் உலகியலை முனிந்தவர்கள் மட்டில் கல்லாடை (காவியுடை) புனைவது முற்காலத்தில் தரும சாஸ்திரப்படி வழக்கிலிருந்தது. தற்காலத்தில் அத்தகைய காவியுடை அலங்காரத்திற்காகவும் சிலரால் அணியப்பட்டு வருகிறது. பெரும்பாலும் உழைப்பினால் உடல் ஓம்ப விரும்பாத பல சோம்பேறிக் குழுவினராலும், கள்ள மறியாத சில பெண்களையும் பேதை மாந்தர்களையும் ஏமாற்றிப் பொருள் பறிக்க எண்ண முடைய பல மோச மதியினராலும் மேற் கொள்ளும் கௌரவ உடையாக மாறி விட்டது. திருவிழாக்களில் இந்தத் திருக் கூட்டத்தினரைத் தவிர வேறு முதன்மையாகக் காணக் கூடிய காட்சி யுண்டோ! இந்தப் பிரிவினர் பெருகப் பெருக உண்மைத்துறவே நாட்டில் ஓடி ஒளிந்தது போலும்? உண்மைத் துறவிக்கு உடையிலும் முடியிலும் வேடம் வேண்டாம். சுயநல விருப்பமே உருக் கொண்ட இவர்களைக் கண்ட மாத்திரத்தில் கடவுளே தோன்றி வரம் கொடுக்க வந்து விட்டதாகக் கருதித் தொழுது அவர் தம் காலில் வீழ்ந்து போற்றித் துதித்து அவர்களுக்கு ராஜோபசாரமும் செய்ய நம் நாட்டில் பெரும் பான்மையோர் இன்றும் தயாராக விருக்கையில் வேடத் துறவிகள் தொகை மிகுதிப் படுவதில் வியப்பதற் கிடமுண்டோ? ஆதலினால் மூதாட்டியார் புறத் துறவை ஈண்டு குறிப்பிடாமல் அகத்துறவையே சுட்டியிருக்கின்றார். முனிவது உள்ளத்தின் காரியமாதலினால் அதனையே வற்புறுத்தினா ரென்பது கவனித்தல் வேண்டும்.

# நெஞ்சு விடு தூது

—(0)—

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)



கண்களுக்கும் கருத்துக்கும் ஒருங்கே பெருங் களிப்பூட்டும் இயற்கை யின்பக் காட்சிகள் பற்பல நிறைந்த தொரு பூஞ் சோலை. கரத்தில் செங்கரும்பு வில் ஏந்தி முதுகில் ஐம்மலர்க் கணைகள் நிறைந்த அம்புப் புட்டிலைத் தாங்கி தென்றல்-தேர் ஏறி மாரவேள் பவனி வரும் மாலை வேளை. பலவகை நறுமண மலர்களில் படிந்த பூந் தென்றற் காற்று, இனிய நறு மணத்துடன் மென்மையாக வீசிக்கொண் டிருக்கிறது. அச் சோலையி னிடையிலுள்ள அழகிய தொரு செந்தாமரைக் குளத்தின் கரையிலே—பசும்புல் தரையிலே—சுமார் பதினெட்டு வயது மதிப்புடைய அழகிற் சிறந்த இள மங்கை ஒருத்தி அமர்ந்து கொண்டிருக்கிறாள். அவளது மலர் முகத்தில் நிலவும் புன்னகையை இப்பொழுது காணோம்; அவளது அழகிய கருவிழிகளி னின்றும் அடிக்கடி கண்ணீர் பெருகி வழிந்து கொண் டிருக்கிறது. அவளெதிரிலே, ஐந்தாறு அழகிய இள மங்கைகள் அமர்ந்து கொண்டிருக்கின்றனர். மற்றவர்களைக் காட்டிலும் வடிவழகிற் பன்மடங்கு சிறந்து விளங்கும் அந்த சுந்தரி, தன் எதிரில் அமர்ந்து கொண்டுள்ள மற்ற மங்கைகளை நோக்கிப் பின் வருமாறு கூறுகிறாள்:—

"அன்பிற் சிறந்த இன்னுயிர்த் தோழிகளே! எனது நிலையை உங் களுக்கு என்னென்று எடுத்துக் கூறுவேன்? உங்களுக்கு என்னிடம் எவ் வளவு அன்பு உண்டென்பதை இப்பொழுதே நான் உணர்கிறேன். என்னைப் பிரிந்து சென்ற எனது இன்னுயிர்த் தலைவராகிய தென்னரங்கத்தின்ன முதரிடம் உங்களுள் எவரை யேனும் தூதனுப்பி யிருப்பின், எனது கவலை நீங்க இதற்குள் எனக்கு ஒரு நற்செய்தி கிடைத்திருக்கும். ஆனால், என்னை மனம் கவர்ந்து மையலேற்றி மயக்கி விட்ட எனது ஆருயிர்த் தலைவரிடம் தெரிவிக்க வேண்டிய செய்தியை, உங்களிடம் வெளியிட எனக்கு மிகுந்த வெட்கமாக இருந்தது. அவ்வாறு உங்களிடம் வெளியிட்டால், நீங்கள் என்னை நாணமற்ற மங்கையாகக் கருதி பரிகசிக்கத் தொடங்கி விடுவீர்களோ என்ற பெரும் பயமும் என் அகத்தினின்றும் அகன்ற பாடில்லை. அவ் வெட் கத்தையும் அச்சத்தையும் எதிர்த்து நின்று போராடக் கூடிய ஆற்றல் எனக்கு இல்லாமற் போய் விட்டது. அதன் பயனாக, எனது மனோகராகிய மணிவண்ணரிடம் உங்களுள் யாரையும் தூதாக அனுப்ப நான் துணிய வில்லை.

எனது ஆருயிர்த் தலைவராகிய சீரங்கேசரிடம், அப்பெருமானது

திருமேனியைப் போன்ற பச்சை மேனியும், அவனது செங்கனி வாயைப் போன்ற செம்பவள வாயும் பெற்று எப்பொழுதும் 'ரங்கா' 'ரங்கா' என்று கத்திய வண்ணமே எங்கும் பறந்து திரிந்துகொண்டிருக்கும் கிளி களை யேனும் தூதனுப்பி யிருக்கலாம். ஆனால், மார வேளைத் தாங்கித் திரியும் வாகனமாகிய கிளியை, அம் மாரனை ஈன்ற திருமாலிடம் தூதனுப் பத் துணிய முடியவில்லை. மேலும், 'சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளை' என்னும் முதுமொழிக் கிணங்க, நான் சொன்னதையே பெருமா னிடம் திருப்பிச் சொல்லக் கூடுமே யன்றி, நான் இங்கு படும் பாட்டை எனது உண்மை நிலையை உள்ளபடி உணர்ந்து கொண்டு, தமது சொல் வன்மையினால் கேட்போர் நெஞ்சு கரைந்து உருகும்படி செய்விக்கக் கூடிய சக்தி கிளிகளுக்கில்லை. நான் இங்கு அனுபவித்துக் கொண்டிருக்கும் மனத் துயர் எத்தகைய தென்பதைச் சிறிதும் அறியாதவர்களைத் தூதனுப்புவதால் பயனென்ன ?

இந்த சோலையிலே மலர்ந்துள்ள பலவகைப் பட்ட மலர்களினின்றும் பெருகிய செந்தே னருந்திச் சிந்தை மயங்கித் 'தந்தா'—'தனா' என்று பல வகைப் பட்ட பண்கள் பாடிப் பறந்து திரிந்து கொண்டிருக்கும் பொன் வண்டுகளைத் தூதனுப்பவும் நான் துணியவில்லை. மாரவேளின் செங்கரும்பு வில்லின் நாண்கயிறாக விளங்கும் அவற்றை, தேவ தேவனாகிய திருமாலிடம் தூதனுப்புவது நன்றோ ? மேலும், மது வருந்தி மதி மயங்கிப் பித்து பிடித் தனவே போல் தம்மை மறந்து பறந்து திரிந்து கொண்டிருக்கும் அவ் வண்டு கள், நான் படும் பாட்டை உள்ளபடியே உணர்ந்து கொண்டு எனது நிலையை எம்பெருமானிடம் தெளிவாகத் தெரிவிக்கக் கூடிய சக்தி யுடையன வாகுமோ ? அவற்றைத் தூதனுப்புவதாலும் நற்பயன் எதுவும் விளையா தென்பதை நன்கு உணர்ந்து கொண்டு விட்ட நான், அவற்றைத் தூதனுப்ப இசையவில்லை.

அதோ, அந்த தாமரைக் குளத்திலே, நீல நீரின் மேல் கம்பீரமாக நீந் திக் கொண்டிருக்கும் அந்த அன்னப் பறவைகளைப் பார்க்கப் பார்க்க மிகுந்த இன்பமாகத்தா னிருக்கிறது. அவற்றைப் பார்க்கும்போது, முன்னொரு கால் 'அன்னமதாகி அறநூலுரைத்த' அரங்கேசரின் நினைவு அகத்தில் தோன்றுகிறது. எனினும், அவற்றைத் தூதனுப்பவும் நான் விரும்பவில்லை. நீர் கலந்த பாலை அவ்வன்னப் பறவைகள் அருந்தும் போது அவை பாலி னின்றும் நீரைத் தனியே பிரித்து விடும் இயல்பினவாக இருப்பதால், அவற்றை எனது ஆருயிர்த் தலைவரிடம் தூதனுப்பி விட்டால், அவை அவருக் கும் எனக்கும் இடையிலுள்ள இணையற்ற நட்பைப் பிரிக்க முயன்று விடுமோ எனும் பயமும் எனக்கு உண்டு. ஆதலால், அவ்வன்னப் பறவை கள் அக் குளத்தில் வரிசை வரிசையாக நீந்திக்கொண்டிருப்பது கண்டும், எம் பெருமானிடம் தூதனுப்ப அவற்றுள் எதையும் தேர்ந்தெடுக்க என் மனம் இணங்கிய பாடில்லை.

மற்ற எவரையும் எளிதில் நம்பாத நான், முடிவிலே தஞ்ச மடைந் தார்க்கு 'அஞ்சல்' என்று அருளும் அழகிய மணவாளப் பெருமானிடம் எனது நெஞ்சையே தூதாக அனுப்பத் துணிந்து விட்டேன். என்னைச் சுற்றிலும் எவ்வளவு பேர் சூழ்ந்திருப்பினும், அவர்களுள் எவரும் எனது நெஞ்சைப் போல் எனக்கு உதவ மாட்டார்களென்ற எண்ணத்தினாலே,

செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரைத் தழுவி மகிழக் கொண்ட ஆர்வப் பெருக்கினாலே, எனது ஆருயிர்த் தலைவராகிய அணியரங்கேசரிடம் எனது நெஞ்சையே தூதாக அனுப்பினேன். நான் படும் பாடு எத்தகைய தென்பதை நான் எடுத்துச் சொல்லாமலே, அந் நெஞ்சு நன்கு உணர்ந்து கொண்டு விட்டிருக்கிறது. மேலும், மற்றெல்லாவற்றைக் காட்டிலும் எம் பெருமானிடம் மிக மிக விரைவில் சென்று விரைவில் திரும்பி வரக் கூடிய மகத்தான அற்புத சக்தி அந் நெஞ்சுக்கு உண்டென்பது, நேற்று வரையில் எனக்குப் பேராறுதலாக இருந்து வந்தது. அந் நெஞ்சைக் காட்டிலும் என்னிடம் அன்பும் ஆர்வமும் பரிவும் மிகுந்தவர்கள் வேறு எவருமில்லை யாதலின், அந் நெஞ்சை தென்னரங்கச் செல்வனாரிடம் தூதனுப்புவதால் கோரிய சீரிய காரியம் விரைவில் இனிது நிறைவேறக் கூடுமென்னும் நம் பிக்கை எனக்கு மிகுந்திருந்தது. எனது நெஞ்சு என்னிடமிருந்து பிரிந்து எம்பெருமானிடம் சென்றபோதே, நான் அனுபவித்துக் கொண்டிருந்த எல்லா வகைபட்ட துன்பங்களுக்கும் விமோசன காலம் நெருங்கி விட்ட தென்று நான் கொண்ட மகிழ்ச்சிப் பெருக்கு எத்தகைய தென்பதை வாயினால் சொல்லி உணர்த்தக் கூடிய ஆற்றல் எனக்கு இல்லை. ஆனால், அந் நெஞ்சை அரங்க நாயகரிடம் தூதனுப்பியது பெரும் பிழை என்பதை இப் பொழுதே நான் உணர்கிறேன். நானே எனக்குத் தேடிக் கொண்ட பெரும் பிழையை நினைக்க நினைக்க, எனக்குத் துன்பமும் ஆத்திரமும் மேன் மேலும் பொங்கிப் பெருகிக் கொண்டிருக்கின்றன. எனது நெஞ்சை எனது ஆருயிர்த் தலைவரிடம் தூதனுப்பியதன் பயனாக, ஏற்கெனவே நான் அனுபவித்துக் கொண்டிருந்த துன்பம் இப்பொழுது இரட்டித்து விட்டது. இப் பெரும் பிழையை—இக் கொடுந்துயரை—இனி நான் யாரிடத்தில் முறையிட்டு ஆறுதல் பெறக் கூடும்? எனது நெஞ்சே என்னை வஞ்சிக்கத் துணிந்துவிட்ட போது, இனி என் பக்கலில் மனமிரங்கக் கூடியவர்கள் வேறு யார்?

எனது நெஞ்சிடம் நான் என்ன சொல்லி யனுப்பினேன், தெரியுமா?

"வாராய் மட நெஞ்சே! உனக்கும் எனக்கும் தனிப் பெருந் தலைவராக விளங்குபவர் எவர் தெரியுமா? அவர்தான், இரு காவிரிகளின் இடையிலே-அழகிய சோலைகளின் நடுவிலே—வேதங்களின் உயரிய தத்துவப் பொருளை உணர்த்தி நிற்பதாக ஒப்புயர்வற்ற தனிப் பெருஞ் சிறப்புடன் விளங்கும் ஸ்ரீ ரங்க விமானத்திற்குள்ளே—ஐந்தலைகள் கொண்ட அரவாசப் பள்ளியின் மேலே—அறிதுயில் கொண்டு கிடக்கும் ஆதிமூலப் பரம்பொருளாகிய அரங்கநாயகர் ஒருவரே, உனக்கும் எனக்கும் தனிப்பெருந் தலைவராவர். அவரது சிறப்புகள் அளவிட முடியாதன வாகும். அவரது திரு வருட் சிறப்புகளைப் பேசிப் பேசி—அவரது கல்யாண குணங்களைப் புகழ்ந்து பாடிப் பாடி—வடமொழி வேதங்கள் நான்கும், அவற்றின் முடிவு காண முடியாமல் பெரிதும் தவித்து நிற்கின்றன. ஆதலால், சிற்றுருவம் பெற்றுள்ள நீயும் எம்பெருமானது கல்யாண குணங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கி விடாதே. அதனால், உன்னை நீயே மறந்து நிற்கும் நிலை நேர்ந்துவிடும். நான் மறைகளாலும் கண்டு பிடித்தற்கு அரியனவாகிய எம்பெருமானது கல்யாண குணங்களுக்கு எல்லை காண முடியவில்லை யென்பது உனக்கு அவமான மாகாது. அக் கல்யாண குணங்களை அவ் வெம்பெருமானே உணர்ந்த உணர்ந்து கொண்ட ஆழ்வார்கள் பதின்மரும், அவற்றைத் தமது அருள்

கனிந்து பக்தி ரஸம் நிறைந்த செந்தமிழ்ப் பாக்களில் தெளிவாக விளக்கிக் காட்டிச் சென்றிருக்கின்றனர். ஆதலால், அத் திருவருட் செல்வர்களாகிய ஆழ்வார்கள் அகம் கரைந்து உருகிப் பாடிய—தேவாமிர்தத்தினும் பன் மடங்கு சிறந்த சுவையை உடைய—அருட்பாக்களைப் பெரிதும் 'உருகிக் கரைந்து நின்று' விண்ணப்பித்துத் துதித்து திருவரங்கச் செல்வனாரின் திரு வுள்ளத்தைப் பெரிதும் குளிர்விக்கச் செய்ய வேண்டுவதே உனது முதற் பெருங் கடமையாகும்.

உனது விண்ணப்பத்தால் பெரிதும் திருவுள்ளம் உகந்தருளும் திருவரங் கச் செல்வனார், உன்னை நோக்கி உனது விருப்பம் என்னவென்று 'பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பெரும் பரிவு'டன் கேட்டருள்வார். அவ் வேளையிலே, அசட்டுத்தனமாக அப் பெருமானிடம் நீ வேறு எதையேனும் கேட்டுவிடாதே.

"தோளிணை மேலும் நன் மார்பின் மேலும் சுடர்முடி மேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாய் உடை அம்மான்"—ஆக விளங்கும் செங் கோலுடைய திருவரங்கச் செல்வனாரது செங்கமல வண்ண மென்மலர்த் திருவடிகளின் மேல் கிடக்கும் 'தெய்வத் தண்ணந்துழா'யின் மேலேயே, எனக் குப் பெரு விருப்பமாயிருக்கிறது. பகலும் இரவும் அவன் ஒருவனையே நினைந்து நினைந்து உருகிக் கொண்டிருக்கும் எனக்கு, அத் தெய்வத் தண்ணந் துழாய் ஒன்றே ஆறுதலும் ஆனந்தமும் அளிக்கக் கூடியதாகும். அப் பெரு மானது 'தாட் பட்ட தண் துழாய்' எனது மார்பில் சேருமாயின், எனது கொங்கைகள் குதூகலித்துப் பூரித்து விம்மி, எனது ஹிருதயத்தை ஆனந்தக் கடலில் ஆழ்த்திவிடும். அத் திருத்துழாய் எனது தோள்களில் படுமாயின், இப்பொழுது எம்பெருமானது பிரிவாற்றாமல் பெரிதும் ஏங்கி மெலிந்து தளர்ந்து கிடக்கும் இத் தோள்கள், மகிழ்ச்சிப் பெருக்கால் இழந்த வனத் தைத் திரும்பவும் அடைந்து பூரித்து நிமிர்ந்து நிற்கும். அத் திருத்துழாய் எனது முடியின் மேல் படுமாயின், இப்பொழுது என்னைச் சூழ்ந்து துன் புறுத்திக் கொண்டிருக்கும் எல்லாவகைப் பட்ட துன்பங்களும் தத்தம் வலி யொடுங்கி விரைந்து விலகிச் சென்றுவிடும். ஆதலின், எனக்கும் உனக்கும் தனிப்பெருந் தலைவராய அழகிய மணவாளப் பெருமாளிடம் நீ சென்று நின்று, அவரது திருவுள்ளத்தைக் குளிர்விக்கும் ஆழ்வார்களின் அருட்பாசுரங் களால் அவரை உண்மைப் பேரன்புடன் துதித்து, அதற்குப் பரிசாக அவரது திருவடி மலர்களின் மேல் கிடக்கும் 'தெய்வத் தண்ணந்துழா'யை அளித் தருளுமாறு கேட்டுப் பெற்று வாங்கிக் கொண்டு என்னிடம் திரும்பி வந்து சேர்க்கடவாய்."

——என்று எனது நெஞ்சுக்குச் சொல்லிக் கொடுத்து, அதனை அணி யரங்கச் செல்வனாரிடம் தூதனுப்பி வைத்திருந்தேன். அது திருத்துழாய் பெற் றுத் திரும்பி வருமென்று எதிர்பார்த்து எதிர்பார்த்து நெடுங்காலம் கடந் தும், அது இன்னும் என்னிடம் திரும்பிவந்து சேர்ந்த பாடில்லை.

இனிமேல், அந்த நெஞ்சைக் குறித்து வருந்தித்தான் என்ன பயன்? நீல மேகத்தினிடையே ஒப்புயர்வற்ற சீரிய பேரருள் ஒளி பொருந்திய மின் னல் ஒன்று நிலைத்து நிற்பதேபோல், கருணை பொழியும் கண்களுடன் கூடிய வரான திருமாமகளார் சிங்காரமாக வீற்றிருக்கும் செங்கோலுடைய திருவரங் கச் செல்வனாரின் திருமார்பின் அழகில் எனது நெஞ்சு ஈடுபட்டு விட்டிருப்

பின், அந்த திவ்ய ஸேவானந்தத்தை அனுபவிப்பதை விட்டு விட்டு என்னிடம் திரும்பிவர அதனால் முடியுமோ? மேலும், அவனது வீரத் தோள்களின் பேரழகில் எனது நெஞ்சு ஈடுபட்டு விட்டிருந்தால், அது அந்த ஆனந்தானுபவத்தை விட்டு விட்டு இங்குவா இயலுமோ?

"என்னுடை நன்னுதல் நங்கைமீர்காள்!
யான் இனிச் செய்வது என்? என் நெஞ்சு என்னை
'நின்னிடையேனல்லேன்'—என்று நீங்கி,
நேமியும் சங்கும் இரு கைக் கொண்டு
பன்னெடுஞ் சூழ் சுடர் ஞாயிற்றோடு
பால் மதி ஏந்தி ஓர் கோல நீல
நன்னெடுங் குன்றம் வருவதொப்பான்
நாள் மலர்ப் பாதம் அடைந்ததுவே!"

ஒளி பொருந்திய நெற்றியுடைய எனது இன்னுயிர்த் தோழிகளே! இனி, என்னால் என்ன செய்ய முடியும்? முன் பெல்லாம் எனக்கு உரியதாக இருந்துவந்த எனது நெஞ்சு இப்பொழுது என்ன செய்துவிட்ட தென்பதை நீங்கள் அறிவீர்களா? அது, இப்பொழுது என்னை நோக்கி, "இனிமேல் எனக்கும் உனக்கும் எவ்வித சம்பந்தமு மில்லை"—என்று கூறிக் கட்டறுத்து எனது பிணிப்பினின்றும் தன்னைத் தானே விடுவித்துக் கொண்டு என்னிடத்தி னின்றும் நீங்கிச் சென்று, செஞ்சுடர் வெங்கதிரோனையும் வெண் சுடர்த் தண்மதியையும் ஒரே காலத்தில் தாங்கிய வண்ணம் ஓர் நீலக் கோல மலை நடந்து வருவதேபோல், வெற்றி வீரச் சக்கர—சங்கங்களைப்பற்றிய திருக் கைகளுடன் வரும் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரின் செங்கமல வண்ண மென மலரடிகளையே அடைக்கலமாக அடைந்து விட்டது. திருவரங்கச் செல்வனாரின் திருமார்பின் அழகிலும் திருத்தோள்களின் அழகிலும் மயங்கி இன்புற மூயங்கிப் பரவச மடைந்து நிற்கும் எனது நெஞ்சு, இப்பொழுது என்னையும் மறந்து—தன்னையும் மறந்து—சொற்களினால் உணர்த்த முடியாத—வர்ணனைக்கு அடங்காத—தனிப்பெரும் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறது. ஆயினும், அந்த நெஞ்சு என்னுடன் நெடுங் காலமாகச் சேர்ந்திருந்ததைக் கூட சிறிதும் சிந்தித்துப் பாராமல், எனது உடலை இங்கே கிடந்து தவிக்கும்படி விட்டு விட்டு தான் மட்டும் தன்னந் தனியாக திருவரங்கப் பெரு நகரில் பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்து கிடப்பது முறைதானோ? அந்த நெஞ்சு அனுபவிக்கும் ஆனந்தத்தை, எனது உடல்முழுதும் அனுபவித்துப் பரவச மடையும்படி, திருவரங்கச் செல்வனார் எளியேனைத் தம்மிடம் அழைத்துக் கொண்டருள என்று தான் திருவுள்ளம் இரங்கியருள்வாரோ அறியேன். அவர் அவ்வாறு செய்தருளத் திருவுள்ளம் இரங்கியருளும் வரையில், இம்மாய உலக வாழ்க்கையிலே எனக்கு அமைதியேனும் ஆறுதலேனும் ஏற்பட இடமுண்டோ!"

(இக் கட்டுரை, திவ்ய கவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய திருவரங்கக் கலம்பகத்திலுள்ள "நீரிருக்க"—என்று தொடங்கும் இருபத்து நான்காவது திருப்பாசுரத்தின் கருத்தை ஆதாரமாகக் கொண்டு எழுதப் பட்டதாகும்.)

சிறு கதை.

# பட்டிக்காட்டு பார்வதி

(K. V. சிவசுப்பிரமணியன் B. A.,)

மாலை 4-15 மணிக்கு எலெக்ட்ரிக் டிரெயின் பீச்சு ஸ்டேஷனில் வந்து நின்றது. பார்வதியம்மாள் வண்டியை விட்டிறங்கி தம்பு சாமியைக் கையிற் பிடித்தவண்ணம் பவளக்காரத் தெருவிலிருக்கும் தன் தமக்கை வீடு நோக்கி நடந்தாள். பனிரெண்டு நிமிஷங்களில் வீடு போய்ச் சேர்ந்தாள். தங்கையைக் கண்ட பங்கஜம் "வாம்மா? ஊரில் எல்லாம் சவுக்கியந்தானு? எப்போது புறப்பட்டாய்? முன்னுடி கடிதம் எழுதப் படாதா? சரி இருக்கட்டும். குளித்துவிட்டு சாப்பிட்டு சாவகாசமாய்ப் பேசலாம்" என்றாள். பார்வதியும் புன் முறுவல் பூத்த முகத்துடன், "காலமே பொறப்பட்டு இப்பதான் ரயிலிலே இருந்து நேரா வர்ரேன். எல்லாம் சவுக்கியந் தான்" என்று சொல்லிக் கொண்டே குசேலர் கண்ணபிரானுக்கு அவல் கொடுத்தது போல், காராபூந்தி பொட்டல மொன்றை குழந்தைகள் முன்னே எடுத்து வைத்தாள். அது லட்டு அல்லது உயர்ந்த பலகாரமாக இருந்திருக்க வேண்டு மென்பது பங்கஜத்தின் 'எண்ணமாகையால் தெரியாமல் உதட்டைப் பிதுக்கினாள். பிள்ளைகள் பொட்டலத்தை எனக்கு உனக்கென போட்டி போட்டுக் கொண்டு தின்றன.

திருச்சி ஜில்லாவில் வேப்பூர் என்ற ஒரு சிறு கிராமத்தில் பார்வதியின் கணவன் 'போது மென்ற மனமே பொன் செய்யு மருந்து' என்னும் கொள்கைப் படி வேளாண்மைத் தொழில் புரிந்து வந்தான். பிழையற எழுதப் படிக்கத் தெரிந்தவன். மூன்று ஏக்கர் நிலத்தில் முது கெலும்பு வளைய பாடுபட்டு சாகுபடி செய்து பெருமகிழ்வுடன் காலங்கழித்து வந்தான். வருஷத்திற்கு வேண்டிய கடலை, துவரை, எள், பயறு முதலானவைகளைத் தன் நிலத்திலேயே சாகுபடி செய்து கொண்டான். ஆண்டு தோறும் மீதியாகும் விளை பொருள்களை விற்று சிறு மனையொன்று கட்டி பெருவாழ்வு வாழ்ந்து வந்தான். பெண்களுக் கவசியமான இரண்டொரு நகைகளையும் தன் மனைவிக்குச் செய்து போட்டான். ஆபத்துக் கென சில ரூபாய்களையும் மீத்து வைத்தான். வேலை செய்த நேரம் போக வீடுவந்து குழந்தைகளைக் கொஞ்சிக் குலாவி முத்தமிடுவான். இத் தகைய மாணிக்கம் பிள்ளையின் வாழ்வைக் கண்டு அவ்வூரில் பொறாமை யுறுவோர் பலர்.

பங்கஜத்தின் கணவன் மாதம் 100 ரூ. சம்பளம் பெறும் ஒரு சப் ரிஜிஸ்ட்ரார். அவருக்குப் பிள்ளைகள் நான்கு. சென்னை பவழக்காரத் தெருவில் தன் அந்தஸ்திற்குத் தகுந்த 20 ரூ. குடிக்கூலியில் ஒரு மாடி வீடு. இங்கிலீஷ் நாகரீக நடையுடை பாவனைக்காக ரூ. 20. வாரத்திற் கொருநாள் வீதம் சினிமா, டிராமாக்கள் பார்க்க ரூ 10. சோப்பு, செண்ட், வாசனை பாக்குத்தூள், டிராம் செலவு, குலோப்ஜான், டில்லி பஹாதுர்ஷா முதலிய பலகாரங்

கள் வகையறுவுக்கு ரூ 15. இங்கிலீஷ் காய்கறிகளை உபயோகிக்கும் தட புடலான சாப்பாட்டு விஷயத்தில் ரூ 25. அவருக்கு ஆபீசில் டிபன் செலவு ரூ. 5. கிண்டி ரேஸுக்கு ரூ 10. எனக்குத் தெரிந்த வரையில் இந்திர போகம் பிள்ளையின் மாதவாரிச் செலவு இது. மாத முடிவில் அஞ்சு அல்லது ஆறு கடன் வாங்காமல் இதோடு முடித்து விட்டால் பிள்ளையாருக்கு தேங் காய் உடைக்க வேண்டியது தான்.

இரவு 8 மணிக்கு சாப்பாடு முடிந்தது. தனக்குத் தெரியாத பல புதிய பதார்த்தங்கள் இலையில் வைத்திருந்தும் பார்வதி அவைகளைப் பற்றிக் கேட்காமலே சாப்பிட்டு எழுந்து வந்து விட்டாள். எல்லோரும் சாப்பிட் டாய் விட்டது. இந்திர போகம் பிள்ளை மைத்துனியை க்ஷேமம் விசாரித்து விட்டு பெட்ரூமில் படுத்துக் கொண்டார். குழந்தைகள் தூங்கி விட்டன. பார்வதியும் பங்கஜமும் வெற்றிலை போட்டுக் கொண்டே பேச ஆரம்பித்தார் கள். பங்கஜம் "பார்வதி! நீயும் நானும் ஒரு வயிற்றிற் பிறந்தும் என் சுகம் உனக்கு வருமா? குடி இருப்பது விசாலமான வீடு. காலையி லெழுந்தால் பூரியுடன் காப்பி. மத்தியானம் 12 மணிக்கு நால் வகைக் கறிகளுடன் சாப் பாடு. சாயந்திரம் டிபன். ராத்திரிக்கு சாப்பாடு. எங்க துணிமணியைப் பார்த்தாயா? 2½ ரூபாய்க்குக் குறைந்த ரவிக்கையும் 20 ரூபாயுக்கு குறைந்த புடவையும் கட்டுவதில்லை. பிள்ளைகளுக்கு சில்க் பாவாடைகளும் கோட்டு களும் சிறு பூட்சுகளும். என் வீட்டுக்காரரும் நாகரீக உடையுடன் ஆபீசுக் குப் போவார். கிராமத்திலிருந்து கொண்டு கஷ்டப் படும்படி ஆண்டவன் உன்னைப் படைத்தான்." என்று கூறி இறுமாப்புடன் கனைத்தாள்.

"அக்கா! நீ எப்படிப் புகழ்ந்தாலும் நாங்க எங்க ஊரை விட்டு வர மாட்டோம். உங்க போலி வாழ்வு எங்களுக்கு வேணும். நாங்கள் ஏழை தான். இருந்தாலும், பயமற்ற சுகவாழ்வு. உங்களுக்கு வருமானம் அதிகம். அது போலவே செலவும் நஷ்டமும் அதிகம். பட்டணத்தில் இன்று கோடீஸ் வரன் நாளைக்கி பிச்சைக்காரனு யிருப்பான். உங்கள் வாழ்வு போல எங்கள் வாழ்வு நிச்சயமற்ற தன்று. உன் புருஷர் வேலைக்கு ஆபத்து வந்தால் உனக்கு இங்கு ஒரு வேளை சோறு போடுவார் யார்? திண்டாடி கிராமத்திற்குத் தான் வருவீர்கள். நாங்கள் பட்டபாட்டிற்கு பலனடைவோம். பூமியிலுழைப்பதற்கு ஒரு நாளும் தாழ்வில்லை. நாங்கள் உங்களைப் போல் சரிந்த தொந்தியும் பருத்த கன்னமும் பெறமுடியா விட்டாலும் ஒட்டிய கன்னம் வற்றிய வயிறுடன் கவலையின்றி வாழ்வோம். மழை பெய்தால் நஞ்சையில் நெல் விளையும். இல்லா விட்டால் புஞ்சையில் தானியம் விளையும். எண்ணைக்கும் துன்பமே இல்லை" என்றாள் பார்வதி. உடனே பங்கஜம் கர்வம் மேலிட்டு "போடி போ! வேண்டியதா கிடைக்கும். குப்பையும் கூளமும் சாணியுந் தான் கிடைக்கும். நாகரீகம் வேண்டாமோ? எப்பாடு பட்டாலும் கடைசியிலே குப்பையிலும் சாணியிலுந் தானே சாவுரீங்க. ஒரு நாகரீகச் சரிகை சேலை யுண்டோ? நெய்ப் பலகார முண்டா? பாஷனபிள் நகையுண்டா? வெள் ளிப் பாத்திரங்களுண்டா? டிராமா, சினிமா பார்த்து சந்தோஷமடைய வழி யுண்டா? ஒரு பாழுமில்லாத பட்டிக்காடு. நீ இப்போது இடுப்பிலிருக்கும் துணியோடு நடந்துவந்ததைக் கண்டால் இவ் விடத்தில் என் மரியாதை கெட்டுவிடும். சமயத்தில் கையில் பணமில்லா விட்டாலும் கடன் வாங்கியா

வது ரிக்ஷாவில் ஏறித்தான் வெளியே போவோம். அது தான் பெருமை. கலியாண காலங்களில் கடன் வாங்கியாவது கோல்டு ஸாஸரும் சில்வர் பிளேட்டும் வரிசைவைக்க வேண்டும். இதெல்லாம் நாகரீக வாழ்க்கை. கிணற்றுத் தவளையாகிய உனக் கென்ன தெரியும்?'' என்று வரட்டுத் தவளையடித்துக கொள்வது போல் டம்பமடித்துக் கொண்டாள்.

"அக்கா! நான் சொல்றேன்னு கோவிச்சுக்காதே. நீ பேசற தெல்லாம் புண்ணில் கோலிடுவது போலிருக்கிறது. இச் சென்னை நகரம் அயல் நாட்டு நாகரீகத்தால் தலை தடுமாறி இருப்பதை நீ இன்னம் அறியவில்லை. சரிகைச் சேலை கட்டுவிட்டு சாகுந்தருவாயில் சந்தியில் நின்று ஒரு வேளை சோற்றுக்குக் கதறுபவர் பலர். நாகரீக வாழ்க்கையி லீடுபட்டு நடுத்தெருவில் நிற்கும் டம்பாச்சாரிகள் நிறைந்த இடம் இது. 50ரூ சம்பளக்காரன் 500ரூ சம்பளக்காரனைப் போலிருக்க வேண்டுமென்று கருதி கடன் வாங்கிக் குடித தனம் நடத்துவது. கடைசியில் கடன்காரன் கையிலகப்பட்டு பாம்பின் வாயி லகப்பட்ட தேரை போல் பரதவிப்பது. இன்று தேவலோக வாழ்க்கை நாளை வீடு ஏலம். இன்று புந்திலாடு, ஸ்பென்ஸர் வகையறுக்கள் என்னென் னமோ சொல்றாங்களே அதெல்லாம் சாப்பிடுவார். அடுத்தவாரம் அரை வயிற் றுக் கஞ்சிக்கு அலைவார். ஆகா! என்ன வாழ்க்கை. உங்களூர்ப் பெரு மையை நீ தான் மெச்சிக்கணும். சூது, கிண்டி ரேஸ், குடி, தாசியர் வீடு முதலியவற்றில் ஒன்றன் மேல் உன் கணவன் முகம் பார்த்து விட்டால் நாளைகே நீங்கள் ஒட்டாண்டி தான். (அப்போது பார்வதி தன் கணவன் ரேசுக்குப் போவதை தெரிந்து தான் சொல்லுகிறளோ என்று பயந்து முகஞ் சுளித்தாள் பங்கஜம்) உங்கள் பட்டணப் பெருமை பிச்சைக்காரர் களைக் கேட்டால் தெரியும். "மாட மாளிகையாம்; கூட கோபுரமாம்; ஒரு வேளை சோறு போடாப் பெரியோர்களாம். எங்களூரில் நாங்கள் சாப்பிடுவ தில் ஒரு பங்கைக் கொடுத்து பல ஆண் பெண்களைக் காப்பாற்றுகிறோம். உங்கள் வெள்ளி கூஜாவும் டைமண்டு மோதிரமும் எங்களுக்குப் பெரிதல்ல. மானந்தான் பெரிது. அவை இன்று வீட்டிலிருக்கும், நாளை மார்வாடி கடையில் பெட்டியில் தூங்கும். போலி நாகரீகத்தைப் பின் பற்றிய கார ணமாக கையிலுள்ள இரண்டொரு நகைகளை விற்றுப் பிழைப்பது. பின்பு, கீழே விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்பது போல் இரவல் நகை இரவல் சேலைகளுடன் வெளியில் புறப்படுவது. இந்த விஷயங்களெல் லாம் எனக்கு நன்றாய்த் தெரியுமக்கா. ஆகையா லதிகம் வேண்டியதில்லை. கையில் கிடைத்ததைக் கொண்டு கழுத்து காதை மூடிக்கொண்டு கருத் தாய்ப் பணஞ் சேர்த்து கஷ்டகாலத்திற்கென்று கொஞ்சம் சேர்த்து வைத திருப்போம். கடன் படா வாழ்க்கை வாழ்வோம். அதுவே பெரிது. ஆடம்பர வாழ்க்கை எங்களுக்கு வேண்டியதில்லை. மாதா மாதம் பத்து இருபது ரூபாய் பறிக்கும் (Family) டாக்டர் எங்களுக்கு அவசியமில்லை. எங்களுக்குப் பெரிய கொடிய நோய்கள் வராது. வந்தாலும் கடவுள் கொடுத்த இயற்கை மூலிகைகளினு லின்பமாய்ப் போக்குவோம். ஆகை யால் அதிகம் பேச வேண்டாம். என் கதை ராமாயணமும் உன் கதை பாரதமுமாய் முடியும்'' என்று கூறி முடித்தாள் பார்வதி.

இவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார் இந்திர போகம் பிள்ளை. "ஆஹா! நமது சகலை ஒருவித படிப்புமின்றி விவசாயத் தொழிலை

மேற் கொண்டு எவ்வளவு பெருமையுடன் கவலை யின்றிக் காலங் கழிக்கிறார். அவரை விட நானதிகம் சம்பாதித்தும் கவலை மிகுதியால் எனக்கு தூக்கங் கூட வருவதில்லையே. யானை தன் தலையில் மண்ணை வாரிப் போட்டுக் கொள்வது போல் அனாவசியமான பல காரியங்களில் தலையிட்டுக் கொண்டு துன்பப் படுகிறேன். மாணிக்கம் பிள்ளையல்லவா மக்களில் மாணிக்கம் போல் விளங்குகிறார். நான் நோட்டு நோட்டாய் சம்பாதித்தென்ன பலன்? அவைகளைப் போலி நாகரீக வாழ்க்கை யல்லவோ பாழ் படுத்தி விடுகிறது. இனி இதை அறவே ஒழித்து பார்வதியின் பாங்கான வாழ்க்கையைப் பின் பற்ற வேண்டும்'' என்று பலவித எண்ணங்க ளிடையே ஒரு முடிவுக்கு வந்தார்.

ஒரு வாரம் சென்றது. பார்வதி தன் ஊருக்குப் போக உத்தரவு வேண்டினாள். உடனே சப் ரிஜிஸ்ட்ரார் ஒரு வாரம் லீவு எடுத்துக்கொண்டு கிராம வாழ்க்கையின் வைபவத்தைக் கண்டனுபவித்து வர குடும்பத்துடன் புறப்பட்டார். வேப்பூருக்குச் சென்ற சில நாட்களில் பங்கஜத்திற்கு வேம் பெனக் கசந்த கிராம வாழ்க்கை கரும்பென இனித்தது. சில நாட்களில் இந்திர போகம் தன் வேலையை ராஜினாமா செய்து விட்டு அவ்வூருக்கு கணக் கப் பிள்ளையானார். கர்ணம் இந்திர போகம் பிள்ளை சில நாட்களில் புறம் போக்காய்க் கிடந்த 10 அல்லது 12 ஏக்கர் நிலங்களைச் சாகுபடி செய்து பெரும் பொருள் சம்பாதித்தார். பிள்ளையவர்களுக்கு வேப்பூர் வட்டத்தில் ரொம்ப செல்வாக்கும் யாவருக்கும் தலைவராய் விளங்கினார். பார்வதியை குல தெய்வமாகக் கொண்டாடினார். நான்கு வருஷங்களில் பெரிய பணக் காரராகி ஐயாயிரம் ரூபாய் செலவில் தன் மூத்த குமாரன் இராமலிங்கத் திற்கு கலியாணம் செய்து வைத்தார். தனது செல்வத்தை நாட்டின் நன்மைக்காகச் செல விட்டார். தனது கிராமத்தில் பல கைத் தொழிற் சாலைகள் ஏற்படுத்தி ஏழை மக்களுக்கு ஆதரவளித்தார். ஏழை மாணவர் களுக்கு துணிமணி கொடுத்து காப்பாற்றினார். தனது கிராமம் சிறந்த முறையில் பரிபாலிக்கப் படும்படி ஏற்பாடு செய்தார். தமிழ் நூல்களைக் கற்றறிந்தார். மக்களிடையே தாய் மொழிப் பற்றை உண்டு பண்ணினார்.

(இது "டால்ஸ்டாய்'' என்னும் ருஷ்யக் கவிஞரின் சிறுகதை யொன் றைத் தழுவி எழுதப்பட்டது.)



# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(654-வது பக்கத் தொடர்ச்சி.)

| கிருஷ்ணனுடைய மொத்த சரக்கு | முதல் பவுண்டின் உபயோகம் | "மார்ஜினல்" உபயோகம் | மொத்த உபயோகம் |
|---|---|---|---|
| முதல் பவுண்டு | 100 | 100 | 100 |
| இரண்டு பவுண்டுகள் | இரண்டாவது பவுண்டின் உபயோகம் 100+80 | 80 | 180 |
| மூன்று பவுண்டுகள் | மூன்றாவது பவுண்டின் உபயோகம் 100+80+60 | 60 | 240 |
| நான்கு பவுண்டுகள் | நான்காவது பவுண்டின் உபயோகம் 100+80+60+40 | 40 | 280 |

கிருஷ்ணன் வாங்கும் புகையிலையில் அதிகமாக வாங்கும் பவுண்டுகள் அவனுடைய உபயோகத்தில் சந்தோஷத்தைக் குறைத்து விடுகின்றன. முதல் பவுண்டிலிருக்கும் மொத்த உபயோகம் இரண்டு பவுண்டுகளில் இருந்தும் கிடைக்கும் மொத்த உபயோகத்தைவிடப் பெரிது. இதனால் ஒரு சாமானை நாம் அதிகமாக வாங்கி வைத்துக் கொண்டால் அதன்மீது உள்ள உபயோகம் அல்லது விருப்பம் குறைந்து வருகிறது. குறைபடும் உபயோகச்சட்டம் (The Law of Diminishing utility) என்பதன்படி ஒருவன் கொண்டுள்ள சரக்கு ஒவ்வொரு முறையும் அதிகப்பட்டால் அந்த அதிகப் படுத்தப்பட்ட சாமான் அவனுக்கு அதிகப்படும் உபயோகத்தைக் கொடுப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட சாமான் அதிகரிப்பு அந்த சாமானைக் கொண்டவனுடைய சந்தோஷத்தையோ உபயோகத்தையோ குறைத்துக் கொண்டே செல்லுகிறது. இந்தக் குண விசேஷத்தினால் நாம் விலையைப்பற்றி அந்த மனிதன் எத்தகைய மனப்பான்மையைக் கொண்டுளான் என்பதும் ஆராயத் தக்கதாகும். ஒருவனிடம் உள்ள சரக்கு அதிகரித்துக் கொண்டே சென்றால் அந்த அதிகப்படும் சரக்கின் விலை அதற்கு முந்திய அதே சரக்கின் விலைக்குச் சிறிது குறைந்தே இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அதை வாங்கமுடியும் எனும் கருத்து அந்த மனிதனுக்கு எழலாம். ஆனால் எல்லாம் சரியாக இருக்கும் பட்சத்தில் (other things being equal) அவன் குறைந்த விலைக்குததான் சரக்கை வாங்குவான். எல்லாம் சரியாக இல்லா

விட்டால்—உதாரணமாக ஒருவனுடைய வருமானம் திடீரென்று உயர்ந்தால், அவன் முன்பு வாங்கிய சரக்கை அதே விலையில் அதிகமாக வாங்கலாகும் அல்லது அதிகவிலை கொடுத்து வாங்கலாகும்.

சில சமயங்களில் குறைபடும் உபயோகச் சட்டத்திற்கு மாருக ஒருவனுடைய சரக்கு அதிகரிப்பு அவனுக்கு உபயோகத்தை அதிகப்படுத்தும். ப்ரொபசர் சேப்மேன் (Prof. Chapman) என்பவர் இதைத் திருஷ்டாந்தப்படுத்திக் கூறுகிறார்:—"நாம் கொஞ்சங் கொஞ்சமாய், சிறிய அளவில் சிலவற்றை எடுத்துக் கொண்டால் அதனுடைய ஒவ்வொன்றின் * கடைசி உபயோகம் (Marginal Utility) அதிகமாகத்தான் இருக்கும். உதாரணமாக வீட்டுக்கு அத்தியாவஸ்யமான நிலக்கரியை அவுன்ஸ் கணக்கில் எடுத்துக் கொள்வோம். ஒரு அவுன்ஸ் நிலக்கரி ஒருநாளைய உபயோகத்திற்குப் போதுமா? பிரயோஜனப் படாது. பல அவுன்ஸ்கள் இருந்தாலொழிய அது பயன்படாது. அதனால் பல அவுன்ஸ்கள் சேர்ந்தாலொழிய பயன் கிடையாது. அப்பொழுது அந்த புதிதாகச் சேர்க்கப்பட்ட அவுன்ஸ் ஒவ்வொன்றின் கடைசி உபயோகம் அதிகமாக இருக்கும். ஆனால் உபயோகத்திற்குத் தேவையான ஒரு குறிப்பிட்ட அளவுவரையில் இந்த அதிகரித்த உபயோகம் இருக்கும். பின்பு குறைபடும் உபயோகச் சட்டம் தானுகவே அமுலுக்கு வரும்.

குறைபடும் உபயோகச் சட்டத்திலிருந்தும் மொத்த உபயோகம், "மார்ஜினல்" உபயோகம் எனும் கருத்துகளைக் கவனிப்போம்.

கிருஷ்ணன் புகையிலையை வாங்குகையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் வாங்குவதைப் பற்றி யோசனை செய்கிறான். அந்த சமயத்தில், அந்த விலையில் மேலும் புகையிலையை வாங்குவது பிரயோஜனப் படாது என்று காண்கிறான். அப்பொழுது அவன் கடைசியாக எண்ணி வாங்கும் சரக்கிற்கு "மார்ஜினல்" வியாபாரம் என்று சொல்லவேண்டும்.

முன்பு கொடுத்த கிருஷ்ணனுடைய புகையிலை வியாபாரத்தை மற்றும் ஒருமுறை கவனிப்போம் :

(1) கிருஷ்ணன் முதலில் வாங்கின ஒரு பவுண்டு புகையிலை அவனுடைய மொத்த வியாபாரத்தைக் குறிக்கிறது. அந்த ஒருபவுண்டு அவனுடைய "மார்ஜினல்" வியாபாரத்தைக் காண்பிக்கிறது.

(2) அதே மனிதன் மொத்தமாக இரண்டு பவுண்டுகள் வாங்கும்பொழுது, அந்த இரண்டாவது பவுண்டு "மார்ஜினல்" வியாபாரம் ஆகும். அவன் அந்த இரண்டாவது பவுண்டு புகையிலையை யோசனை செய்தே வாங்குகிறான். மேலும் அதிகமாக வாங்கும் எண்ணம் அவனுக்கு இல்லை.

(3) அதேமாதிரி மூன்ருவது பவுண்டும்.

"மார்ஜினல்" வியாபாரத்தினுல் ஏற்படும் நன்மை அல்லது உபயோகத்தை "மார்ஜினல்" உபயோகம் என்று சொல்லுவார்கள்.

---

* Marginal என்பதற்குத் தனியான தமிழ்வார்த்தை கிடைக்காமையினுல் ஆங்கிலத்தில் இருக்குமாறே எழுதுகிறேன்.

ஒருபவுண்டு "மார்ஜினல்" வியாபாரம் ஆக இருக்கையில் "மார்ஜினல்" உபயோகம் = 100

2-வது பவுண்டின் மா. உ. = 80

3-வது = 60

இதனால் அதே சரக்கு அதிகரித்தால் "மார்ஜினல்" உபயோகம் குறைந்து வருகிறது என்பது விளக்கமாகிறது. கிருஷ்ணன் பல பவுண்டு புகையிலையை வாங்கினால் அவனுடைய "மார்ஜினல்" உபயோகம் பூஜ்யம் ஆகிவிடும். அதற்கு மேலும் வாங்கி வைத்துக்கொண்டால் தெவிட்டிப் போய் திக்குமுக்காட வேண்டியது. உபயோகத்திற்கு பதிலாக வெறுப்பு அல்லது உபயோகமின்மை ஏற்பட்டு விடலாகும். அதை ஆங்கிலத்தில் Disutility என்று சொல்லலாம்.

மொத்த உபயோகம் என்பது எல்லா சரக்குகளின் உபயோகத்தைச் சேர்த்துக் கொள்ளுவதால் உண்டாகிறது. அவனிடம் உள்ள சரக்கு கொடுக்கும் மொத்த சந்தோஷத்தைத் தெரிவிப்பதாகும்.

முதல் பவுண்டின் மொத்த உபயோகம் = 100

இரண்டு பவுண்டுகளின் = 100+80=180

மூன்று = 100+80+60=240

இதனால் ஒரு மனிதன் சரக்கை விருத்தி செய்துகொண்டே போனால் மொத்த உபயோகம் அதிகரிக்கும். ஆனால் அதனுடைய அதிகரிப்பு குறைந்து வரும். (As a man's stock of a commodity increases we see that its total utility to him increases, but it increases at a diminishing rate).

கோவிந்தனுக்கு மாதம் 200 ரூபாய் சம்பளம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் வீட்டு வாடகை, ஆகாரம், உடை, தமாஷ் முதலியனவற்றுக்குச் செலவு செய்யவேண்டும். காப்பி ஒரு பவுண்டு விலை ஒரு ரூபாயாக இருந்தால் அவன் மூன்று பவுண்டுகளை வாங்கலாகும். மூன்றாவது பவுண்டுடன் வாங்குவதை நிறுத்திக் கொள்ளுகிறான். அவன் மூன்றாவது பவுண்டின் உபயோகம் 60 என்று கண்டு கொள்ளுகிறான். இதனால் விலை குறைந்தால் கொஞ்சம் அதிகமாக அவன் வாங்குகிறான். "மார்ஜினல்" வியாபாரத்தில் சரக்கின் விலையை Marginal Demand Price என்று சொல்லலாம்.

(தொடரும்.)






## 50. ஐர்லந்து வாசிகளின் சுய ஆட்சி போராட்டம்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

48-வது வியாசத்தில் எழுதப்பட்ட ஐர்லந்து ஐக்கியத்திற்குப் பிறகு, சம்பவங்களின் போக்கு ஆங்கிலேயர் எதிர்பார்த்ததற்கு விரோதமாக மாறி விட்டது. அதற்கு முன்பு, "கதோலிக்கருக்கு சகல பிரஜா உரிமைகளும் கொடுக்கப்படும்" என்று கொடுக்கப்பட்ட வாக்கு, காரியம் முடிந்ததும் அரசனால் கைவிடப்பட்டது. பிரதம மந்திரி இளைய பிட் சற்று கோபங் கொண்டு 1802-ல் தன் ஸ்தானத்தை ராஜீனாமா செய்தார். பிறநாடு சம்பந்தமான விஷயங்க்ளில், இம் மாதிரி "ஊடல்கள்" கண் துடைப்பு காரியமாக நடிப்பது அரசியல் தந்திரம். இதனால், பிட்டின் பொறுப்பு தீர்ந்து விட்டது. ஆனால் நடிப்பு அனுதாபத்தினால், எந்த காலத்திலும் எந்த ஜனங்களுக்கும் திருப்தி வற்பட்டு விடா தென்பது சரித்திர பூர்வமானது. உண்மையில் இளைய பிட்டுக்கு, "கதோலிக்கர் உரிமைகளில்" பற்று இருந்திருந்தால், நெப்போலிய யுத்தம் மூண்டு மந்திரியானபோது, அதை வற்புறுத்தி இருக்கலா மல்லவா? அப்படிச் செய்யாததற்கு, "வெளி நாட்டிலிருந்து ஆபத்து" என்ற ஒரு பெரிய சால்ஜாப்பு ஏற்பட்டு விட்டது! ஆகவே, பிட் ஆனாலும், வேறு யாரானாலும், சந்தர்ப்பத்திற்கு ஏற்க வாயனுதாபங் காட்டி பொறுப்பே உணராமல் காரியம் சாதித்துக் கொண்டு, "கைவிரல் அறுத்துக் கொள்ளாமல்," பிறகு மறந்து விடுவதும், அப்படி காரிய சாதனத்திற்கு, சுய நலமுள்ள சிலரை கருவிகள் ஆக்கிக் கொள்வதும், நீடித்த கால பழக்கமேயாகும்.

(அப்படியிருக்க, பிராமணர்களை "ஆரியர்கள்" ஆக காட்டி, அவர்களை எதிர்க்க, மற்றவர்களை "திராவிடர்க"ளாக நிறுத்தி, உண்மை விளங்கி விடும் நேரத்தில், ஹரிஜனங்களை "ஆதித்திராவிடர்கள்" என்ற பிரக்ஞை யூட்டி, கிளப்பி எல்லாருக்கும் அறிவு புலப்படும் போது, அரைகுறை விழிப்பிலேயே தாழ்த்தப் பட்டவர்களுக்குச் சலுகை என்றும், முஸ்லீம் என்றும், கிருஸ்தவர்கள் என்றும், ஆங்கிலோ இந்தியர் என்றும், நாட்டா ரென்றும், நகரத்தார்களென்றும், சீக்கர்களென்றும் பலவித கருவிகளை முதலைக் கண்ணீருகுத்து ஏற்படுத்தி, காரியமான பிறகு "பட்டை நாமம்" தான் ஏற்படும் என்பது அறிவாளிகள் உணருகிறார்கள். வேறு சிலரோ என்றால், "கண்களிரண்டிருந்தும் காணும் திறமையற்ற, பெண்களின் கூட்டமடீ—கிளியே! பேசிப் பயன் என்னடீ?" என்று பரிதபித்து நிற்கும் போக்கிலேயே இருக்

கின்றனர் !!) இம்மாதிரி, கருவிகளுக்கும் முடிவில் காத்திருப்பது 'பெப்பே' தான் என்பதில் ஐயமேது ?

பெரும்பாலான ஐரிஷ் கதோலிகருக்கும், தேசப் பற்றுள்ள பல இதர ஐரிஷ்காரருக்கும் அதிருப்தி யேற்பட்டு, ஐக்கியத்திற்கு விரோதமாகவும், சுய ஆட்சி கோரியும் இயக்கம் உடனே தோன்றலாயிற்று. வழக்கம் போல நெப்போலியப் பூச்சாண்டி தான் காட்டப் பட்டது. ஐக்கியத்திற்கு முன்பு தனி ஐரிஷ் பார்லிமெண்ட் இருந்தது. இப்போது இல்லை. யுத்தம் முடிந்து, நெப்போலியன் கைதியாக தூரத்தில் வைக்கப்பட்டும் விட்டான். பிறகு என்ன பயம்? ஐரிஷ்காரரைப்பற்றி கவலைப்படுவானேன் ? ஆனால் ஐரிஷ் காரருக்கு மட்டும் ஊக்கம் தளரவில்லை யென்பது உண்மை. "முயற்சி திருவினையாக்கும்—துன்பம் நெருங்கி வந்த போதும் மனம் சோர்ந்து விடலாகாது—அன்பு நிறைந்த தெய்வம் உண்டு. துன்பம் அத்தனையும் போக்கி விடும்' என்பன பொய்யா மொழிகள். நிரம்ப புத்திசாலியும், வாக்குவன்மை படைத்தவரும் ஆன டேனியல் ஓகானல் (Daniel O' Connell) என்ற ஒரு பாரிஸ்டர் கிளம்பி, கிளர்ச்சிக்கு தலைமை நடத்தினர். "கதோலிக்கர் விடுதலை சட்டம் வந்து, 1829க்குப் பிறகு சாதாரண உரிமைகள் ஐரிஷ் ஜனங்களுக்குக் கிடைத்தன. இவ்வளவு கஷ்டங்களை யனுபவித்தும், கதோலிக்கரில் சிலர் தற்காலத்தில் காட்டும் மனோபாவம் வியக்கத்தக்கதா யிருக்கிறது. இதுவும் ஒரு விந்தையே. பிரஜா உரிமைகளுக்குத் தடை செய்வது எப்படியோ என்பதும் புரியாததாக இருக்கிறது !

அதற்கடுத்து முதலாவது பார்லிமெண்ட் சீர்திருத்த சட்டமும் வந்த போது, வாக்குரிமையுள்ளவர்கள் அதிகமாகி ஐர்லந்தின் தனி விஷயங்களும் அவைகளுக்கான எண்ணங்களும் திட்டங்களும் உண்டாகி, பிரசாரமும், கிளர்ச்சியும் வலுவடைந்தன. ஓகானலும் அவன் சகாக்களும் ஐக்கியத்தினால் ஐர்லந்துக்கு அணுவளவும் புண்ணியமில்லை, எவ்விதத்திலும் சுயேச்சைக் குடியரசு வேண்டும் என்று பாடுபட்டனர். சுயேச்சையின் ஆர்வமும் அதிகமாயிற்று. இதே சமயத்தில் ஸ்காட்லந்தில் சுயாட்சிக் கிளர்ச்சி நடந்தது. இங்கிலாந்தில் பொதுஜனங்களிடையில் பத்திரக்காரர்களின் இயக்கம் பரவி வந்தது. தொழிலாளி முதலாளி போராட்டம் மும்மரமடைந்தது. அதனால் அப்போது நிர்வாக மந்திரிகள் ஓகானலுடன் சமரஸம் பேசி, கிளர்ச்சியை சற்று சமனப்படுத்தினார்கள். சமரஸம் செய்தென்ன ? பேரம் பேசி யென்ன ? இயற்கை யன்னையும் ஐர்லாந்தைச் சோதித்து, கஷ்டங்களை யனுப்பினள். எளிய ஜனங்கள் வாழ்க்கைக்குப் போதிய வசதிகள் இல்லை. வரும்படியும் இல்லை. வயிற்றுக் குணவில்லை. வரியோ குறைவில்லை. நில உரிமையில்லை. குத்தகைக் கடன்கள் குடியானவர்களை ஆழ அமுக்கி யிருந்தது. "உழுதுழுது, நிலச் சொந்தக்காரர்கள் ஆன இங்கிலாந்து அண்ணாச்சிகளுக்கு அழுதுவிட்டு" பட்டினியால் பதைத்து வருந்திய ஐரிஷ் மக்களுக்கு உருளைக் கிழங்குதான் உணவாக இருந்தது. அந்த உருளைக்கிழங்குப் பயிருக்கும் எமன் வந்து, பஞ்சம் ஏற்பட்டு, உணவுக்கான வழியில்லை. பிறநாடுகளிலிருந்து தானியம் வருவதானால், இங்கிலந்தில் நிலச்சுவான்தார் நன்மையை மட்டும் நாடியதான ஒரு தான்ய வரித்திட்டம் இருந்து, தடையாக இருந்தது. தெய்வச் செயலால், சந்தர்ப்பத்தின் அவசியத்தை உணர்ந்த ராபர்ட் பீல் என்ற பிரதமமந்திரியின் உள்ளம் கனிந்து, சட்டம் ரத்தாகியது. ஐரிஷ்

மக்களின் அப்போதைய கஷ்டம் ஒருவாறு நீங்கியது. ஆனாலும் பொதுக் கஷ்டங்களின் மூலகாரணங்கள் இருந்தே வந்தன. அரசாளும் ஆங்கிலேயரின் ஆதீனத்திலுள்ள எந்த நாட்டுமக்களுக்கும் இம்மாதிரியான உணர்ச்சியே பரவிக் கிடந்தது. அமெரிக்கர் மட்டும் தளராது தாக்கி சுயேச்சை பெற்றார்கள். அப்படித் தாக்கும்போதுதான் நிர்வாக கோஷ்டியினர் தூங்கி விழித்தவர்கள் போலும், பூசணிக்காய் திருடியவன் கதைபோலும் பாவனை செய்து, அத் தேசத்தினரில் சிலரையே கொண்டு காரியங்களைச் செய்வது சரித்திரப் பிரசித்தம். அச் சிலர் எக்காலத்திலும், எத் தேசத்திலும் இருந்து ஒத்துக்கு மத்தளமும் தாளமும் போடுவதும் சரித்திர பூர்வமே! 1848-ல் ஓகானல் இறந்தார். கிளர்ச்சியும் சற்று அயர்ந்தது. ஆனால் சாகவில்லை!

இரண்டாவது சீர்திருத்த சட்டம் அதிக வாக்குரிமையுள்ளவர்களை ஏற்படுத்தியது. ஐர்லந்தின் கிளர்ச்சியும் 1864-வாக்கில் தலையெடுத்தது. வெகுகாலம் அரசாங்கத்தின் தன்மையை உணர்ந்து அனுபவித்து, நொந்து, கஷ்டப்பட்டவர்கள் இருந்து, வாயில்லா பாமரமக்களிடையில் உள்ளூற ஊன்றிய துவேஷஉணர்ச்சி ஊறி, அந்தரங்க பூர்வமாக ஆங்கில ராட்சியில வெறுப்பு வலுத்த (Fenians Society) பீனியன் சங்கம் ஒன்று வேலை செய்தது. அதனுடைய அந்தரங்கப் போக்கையும் செய்கையையும் அறிந்த பலருக்கு நடுக்கம் உண்டாகிவிட்டது. அவர்களுடைய நோக்கம் சுயேச்சை குடியாசு ஸ்தாபனமே. முக்கியமாக, பெரும்பாலான கதோலிக்கருள்ள தேசத்திற்கு சட்ட பூர்வமானதாக சீர்திருத்த மதம், கோவில், தர்ம ஸ்தாபனம், மான்யங்கள் முதலிய இருந்தன. இவை ஐரிஷ் மக்களின் மனதைப் புண்படுத்தக்கூடிய விஷயங்கள் என்பதை ஒருவாறு உணர்ந்த அப்போதைய மந்திரி க்ளாட்ஸன் என்பவர், அவற்றைத் தீர்த்து, 1869ல், அரசியல் நிர்வாகத்திற்கும் அவைகளுக்கும் இருந்த சம்பந்தங்களை நீக்கினார். இதுவும் ஒருவாறு நல்ல காரியமேயானாலும், பொதுஜன வெறுப்புக்கான பல இதர விஷயங்களும் இருந்தன. அவைகளையும் சீர்திருத்துவது அவசியம். சற்று விசால திருஷ்டியுள்ள க்ளாட்ஸ்டன், "ஐரிஷ் நிலச்சட்டம்" (The Irish Land Act) என்பதைச் செய்து, விவசாயியின் நிலைமையை சற்று சீர்திருத்த வழி கோலினார். இது, "யானைப் பசிக்கு ஒரு சோளப்பொறி" போலும், "எச்சிலை விழுங்கி தாகம் தணிப்பது" போலுமேயான ஒரு திட்டம்தான். ஐரிஷ் ஜனங்களின் கஷ்டங்களோ எல்லை கடந்தனவாக இருந்தன.

ஆகவே சுயஆட்சி வேண்டுமென்ற கிளர்ச்சியும் உணர்ச்சியும் சுடர்விட்டெரியலாயின. ஐர்லந்தின் தலைநகர் டப்ளினில் (Dublin) ஒரு தனிப் பார்லிமெண்டை ஸ்தாபிக்கவும், தனி சுயேச்சை குடியரசு ஸ்தாபிக்கவும் என்ற பிரதிக்ஞைக்ளுடனுள்ள பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். பார்லிமெண்டுக்கு வந்து முயற்சிகளும் நடந்தன. ஆனால் ஐரிஷ்காரர் ஒரு பகுதியாகவும், இதரர்கள் பெரும்பான்மையாகவும இருக்க அமைப்புள்ள அந்தப் பார்லிமெண்ட்டில், அவர்களுடைய முயற்சி, "சமுத்திரதில் கரைத்த பெருங்காய" மாகியது விந்தையில்லை யன்றோ? எவ்வளவோ பரந்த நோக்கமுள்ளவ ரானாலும், க்ளாட்ஸ்டனுக்கு இதில் விருப்ப மில்லையாம். (பிற நாட்டு விஷயங்கள் வரும்போது, "ஒரு கூடை செங்கல்லும் பிடாரி

யாக மாறி விடு"வது போல்தான். அந் நாட்டாருடைய கோரிக்கை குறைத்து கரைத்து, எதிர்த்து, உருப் படாமல் அடித்து விட வேண்டும் என்பதில் மட்டும் அவர்களுக்குள் அபிப்ராயம் பேதப் படுவதில்லை. பலரும் ஒற்றுமை தான். நிர்வாகத்தில் இல்லாத வரையில் வான மளாவப் பேசி, உச்சி குளிர வாக்களித்து, நிர்வாகத்திற்கு வந்தவுடன் மாறி விடுவது ஆங்கில அரசியல் வாதிகளின் கூடப் பிறந்த குணம். ஆகையினால் தொழிற் கக்ஷியினர் அனு தாபம் நமக்கு ஒன்றும் சாதித்து விடாது என்பது 1929ல் ருஜுவான விபரம். கர்னல் வெட்ஜ்வுட்டோ, ராம்ஸே மாக்டனல்டோ நமக்கு சாதித் தது ஸைபர்தான் என்பது அனுபவம்.)

ஆனால் தேசப் பொது மக்களின் ஒன்றுபட்ட உள்ளக் கிளர்ச்சியை எவ் வளவு வரையில் அடைத்து வைக்கலாம்? சுமார் 1880ல், பார்னெல் (Parnell) என்ற ஒருவர் ஐரிஷ் பார்லிமெண்ட் அங்கத்தினருக்கு தலைவராக ஏற் பட்டார். நியாயமான முறைகளில் சொல்லிப் பார்த்து, பலனில்லாமல், அவருடைய சாதுரியமான நடத்தைகளினால் முட்டுக் கட்டை போட்டு, தடை வேலை செய்யும் முறையை கையாளத் தொடங்கினர். ஆனால் கஷ்டங் களின் மிகுதியினால் தேசத்தில் பலர் பலாத்கார முறைகளிலும் தீவிரமாக இறங்கி கொலைகளையும் ஆரம்பித்து விட்டனர். அவர்களோ, யாரோ, அப் போது ஐரிஷ் காரியதரிசியாக இருந்த (Lord Fredrick Cavendish) பிர டரிக் காவெண்டிஷ் பிரபுவைக் கொன்று போட்டனர். இதைக் கண்ட நிர்வாகிகள் வழக்கம் போல் கண் துடைப்பு வேலையாக மற்றொரு ஐரிஷ் நிலச் சட்டம் செய்வித்தனர். குறைகளைப் போக்க முயற்சியும் செய்யப் பட்டதாம். "உள்ளே அழுகி நாறின, ரணமான பாதாளப் புண்ணுக்கு, மேல் பூச்சு வைத்தியம்" செய்வது போலவே ஆகி, பிரயோஜனம் இல்லா மல், அடக்கு முறைகள் தாம் ஔஷதமாகக் கையாளப் பட்டனவாம்! அதன் காரணமாக, ஐர்லந்து அங்கத்தினர்கள் நிர்வாகத்தை தீவிரமாக எதிர்த்து கண்டனம் செய்யலானார்கள். ஆனாலும் 1885ல் கிளாட்ஸ்டன் நிர்வாகத்தி லிருந்து விரட்டப் பட்டாரெனவும், அது சமயம் அவர் இரண்டாம் முறை பிரதம மந்திரி பதவியை வகித்தாரெனவும் சரித்திரம் கூறுகிறது. இயக் கம் மட்டும் இந்த அடக்கு முறைகளுக் கஞ்சிச் செத்து, நசித்து விடவில்லை யென்பது சரித்திர பூர்வம்!!

மூன்றாவது பார்லிமெண்ட் திருத்தச் சட்டம் 1884ல் ஏற்பட்டது முதல், சுய ஆட்சி இயக்கம் இன்னும் வலுத்தது. நிர்வாகத்தினின்றும் வில கிய கிளாட்ஸ்டன் அறிவு பெற்று, முன்பு தன்னைக் கண்டனம் செய்தவர் களுடன் சேர்ந்து விட்டார். ஐரிஷ் சுய ஆட்சியை ஆதரிக்கவும் ஆகி ஒரு மசோதாவையும் பார்லிமெண்டின் தீர்மானத்திற்கும் அனுப்பி விட்டார். ஆனால் பொது ஜன சபையிலேயே மசோதா மாண்டது! அடுத்து நடந்த பொதுத் தேர்தலில் ஐக்கியமே வேண்டும் என்ற கொள்கையாளரே வெஸ்ட் மின்ஸ்டர் பார்லிமெண்டில் மிகுந்திருந்தனர். அந்த 1886 முதல் 1901 வரையில் நடுவில் சொல்ப காலம் நீங்கலாக, சுய ஆட்சியை எதிர்த்தவர்களே பெரும்பான்மையாக இருந்தனர். நடுவில் 1892 முதல் 1895, சுய ஆட் சியை ஆதரிப்பவர்கள் சொல்ப மெஜாரிட்டி மட்டும் பெற்று, கிளாட் ஸ்டன் கடைசி முறையாக மந்திரி ஸ்தானம் வகித்து, சுய ஆட்சி மசோதாவை மறுபடியும் முயன்று தோற்றார். ஆக பேச்சே ஒழிக்

தது. உணர்ச்சி மிகுந்தது. கிளர்ச்சி வலுத்தது. முயற்சி வளர்ந்தது. அவற்றை ஒழிக்க நடத்திய அடக்கு முறைகளினால் ஒன்றுக்கு பத்தாக வளரவே செய்தது. இதில் ஒரு வேடிக்கை.

1911-ல் மறுபடியும் சுயஆட்சி மசோதா சமர்ப்பிக்கப்பட்டு இம்முறை பிரபுக்கள் சபையில் பிளந்துவிட்டது. சுய ஆட்சியின் அவசியம் உணரப் பட்டபோது உலக மகா யுத்தம் 1914-ல் தோன்றிவிட்டது. உலகத்தையே கிடு கிடுக்கச் செய்தான் மாஜி ஜர்மன் கெய்ஸர்! "அதற்கு உதவி செய்யுங்கள். உங்கள் தலையில் சுய ஆட்சியைத் தூக்க முடியாமல் தூக்கிவைத்து விடுகிறோம்" என்று நிபுணர்கள் வாக்குக் கொடுத்தனர். ஜனங்களும் நம்பி, ஆட்களையும் பொருளையும் வாரிக்கொடுத்தனர். 1918-ல் யுத்தம் முடிந்தது. வாக்குறுதியைப் பற்றி யோஜிக்கச் செய்தனர். அப்போதுதான் அல்ஸ்ட்டர் மாகாண வாசிகளான மஹான்கள் "கூ! கூ! வந்தது கேடு! சுய ஆட்சியா? வேண்டவே வேண்டாம்! நீங்கள் ஐர்லந்துக்கு சுய ஆட்சி கொடுத்தால் நாங்கள் ஆணையிட்டு மறித்து, குறுக்கே படுத்து விடுவோம்!! எங்களுக்கு ஆங்கில ஆட்சியில் நிம்மதியுண்டு! குடியரசில் நாங்கள் ஒழிந்தே போவோம்! வேண்டாம்!! வேண்டாம்!!! மூக்காலும் வேண்டாம்!" என்று அலறினார்களாம். அப்படியும் கொடுத்து விட்டால் தடை செய்யவென்று தொண்டர் படைகளையும், சாரணர் படைகளையும் தயார் செய்தனராம்!" இதைப் பார்த்துதான் தேசீய கக்ஷியினரும் தங்கள் சாரணர்களை ஏற்படுத்திக் கொண்டனராம். இதைக் கண்ட நிர்வாகிகளுக்குச் சொல்லவும் வேண்டுமோ? ஆபத்து தீர்ந்தது. இனி யென்ன? மழுப்ப வேண்டியது தானே. கமிஷன்கள்; கடத்துதல்கள்; யாதாஸ்துகள் தான். இவைகள் சகஜமான சமீபகால சம்பவங்கள்.

சுய ஆட்சி சூன்யம் என்று கண்ட தீவிர கோஷ்டியினர் (Siun Fien) வலின் பீன் என்பவரால் உண்டான கோஷ்டியில் சேர்ந்து, பலத்கார முறைகளான சுடுதல், கொல்லுதல், கொளுத்துதல், கொள்ளையடித்தல், சூறையாடுதல்கள் செய்து, நாசமாக்கி, அல்லல்படுத்தி, அலறத் திணற ஆட்டிவைத்தனர். பிரிட்டிஷ் சிங்கமும், தன்னால் முடிந்த அடக்கு முறைகள் பலவற்றையும் பூராவாய் பிரயோகித்து, தீராத முறைபாய், வழிக்கு வந்து கொடுத்து விட்டது; தற்போதைய டிவாலரா நடத்தும் ஐரிஷ் சுயேச்சை நாடு (The Irish Free State). அதில் தான் டிவாலராவின் சாமாத்தியம் முழுவதும் காண்பிக்கப் படுகிறது என்பன போன்ற விஷயங்கள் நடவடிக்கை கால விபரங்கள் பத்திரிகைகளில் காணலாம்.

(ஆக இம்மாதிரியான போராட்டங்கள் எல்லாவற்றைக் காட்டிலும், புதுமையானதும், உலக சரித்திரத்திலேயே கிடையாததாகவும், தர்மமானதும், தீரமானதும், இரத்தக் கறையற்றதும், பகைவனுக்கும் அருளக் கூடியதும், உலகமே போற்றக் கூடியதும், தன்னலத்தியாக உணர்ச்சி பொருந்தியதுமான நம் நாட்டுப் போராட்டம் சிந்தித்து தெளிய வேண்டியதாகும்.)

அடுத்து, ஐரோப்பாவில் இங்கிலாந்து நடத்திய சில போர்களைப் பற்றி சுருக்கமாக எழுதப்படும்.



# இயற்கையால் மகன் கற்பது

———:(o):———

(கோட்டாறு-தே. ப. பெருமாள்.)

சின்னஞ் சிறுபூவில்—மகனும்
சிரியைக் கற்பதுண்டே
வன்னக் கருவண்டும்—மகிழ்வை
வடித்துக் காட்டலுண்டே. (1)

பூங்கொடி கொம்புறவால்—பின்னி
வாழ அறிவதுண்டே
தீங்கவின் செய்மழையில்—நன்மை
செய்ய விழைவதுண்டே. (2)

தாழ்ந்த இளமரத்தால்—மகனும்
தாழ்மை படிப்பதுண்டே
வீழ்ந்த சிறுமலரில்—நிலையிலா
வாழ்வை அறிவதுண்டே. (3)

பாலோடியை நீரால்—சாயும்
பண்பை அறிவதுண்டே
மேலோர் உறவதனில்—வரும்
மேன்மை விளங்குமிதில். (4)

சொந்த இடத்தை விடின்—சிறுகயல்
துள்ளியே சாவதுண்டே
இந்த நிலையினிலே—நாடுமே
மகன் உயிராகும் ! (5)

தூமதி வெண்ணிலவும்—பின்னர்
தோன்று மிருளாலே
மாமகன் வாழ்க்கையதின்—இன்ப
துன்பம் அறிவதுண்டே. (6)

பின்னுஞ் சிறுசிலந்தி—முயற்சியின்
பின்னிலை காட்டலுண்டே
கன்னக் கருங்காகம்—கடமையை
கரைந்தே காட்டுமையா ! (7)

தோய்ந்த இடத்தி லெல்லாம்—மருதோணி
தன்னிறம் தீட்டுவதை
ஆய்ந்த பெருமகனும்—தன்புகழ்
ஆக்கம் விழைவதுண்டே. (8)

கட்டி பிடித்த வெண்ணை—கனற்
காற்றி லுருகுவதால்
துட்டர் செய்கையினால்—நோவும்
துயர் அறிவதுண்டே. (9)

இன்னும் இயற்கையிலே—மகனும்
இதயம் வைத்துக்கண்டால்
பின்னுமறி வதுதான்— ஒரு பெரும்
பாகமு முண்டு ஐயா. (10)

# கடவுள் முன்னிலையில் காதல்

—:(o):—

(வெ. கணேசன்.)

மாலை நேரம், கதிரவன் மறையும் நேரம். எங்கு பார்த்தாலும் செம்பொன் வார்த் தூற்றியதுபோற் கவின்பெற் றொளிர் கின்றது.

திருவாரூர்ப் பெருநகரில் பெரியதோர் வீதி கட்டிளங்காளைப் பருவத் தினனாய ஓர் அரனன்பன் திருவெண்ணீறணிந்து நன்கு ஆடையாபரணங்களா லலங்கரித்துக்கொண்டு, தன் போன்ற வடியார்கள் புடைசூழ ஆரூரரை உள் ளன்புடன் தரிசிக்கச் செய்கின்றனன். அவ்வன்பன், கண்டாற காமனோ, அன்றி மாறனோ, அன்றிக் குமரனோ என் றையுறத்தக்க அழகு வாய்ந்தவன்.

அதே வீதியில் மற்றொரு சாரியில் 12 வயதுடை மங்கை யொருத்தி வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காய், கற்பூரம், நறுமணங்கமழ் நாண்மலர் முதலியவைகள் வைத்த தங்கத் தட்டொன்றை, தனது தந்தம் போன்ற மணிக் கையிலேந்தி, அன்னநடை பயின்று தாரகை நடுவண் தண்மதியன்ன சேடியர்கள் புடைசூழ வருகின்றாள்.

இருவரும் ஒருவரை யொருவர் சமீபித்துச் சந்தித்தனர். கண்ணொடு கண்ணோக் கொத்தன. பின் விளம்பவும் வேண்டுமோ?

மங்கையைக் கண்ட நம்பி மனத்துள் "மையல்" என்னும் பொருட் சென்று பதிந்தது. கண்கொள்ளாக் கவினுடை மங்கையை அம் மன்னனுக்கு நிலத்துறை மாதென்று தோன்றவில்லை. இஃது யாரோ வானுறை மாதோ என்றையுற்றான்.

ஆனால், இவ்வரனன்பனாகிய காதலனுக்கும், ஏனையோருக்கும் வேறுபா டுளது என்பது மாத்திரம் நன்கு விளங்குகின்றது. எவ்வாறெனில், வேறு தலைமகன் தலைமகளைக் கண்ணுறுங்கால் ஐயமாகிய துறையில், அம்மங்கையை பூவிலுறைமாதோ அன்றி வானுறை வனிதையோ வென்றையுறுவான். மேலும் அச்சமயம் கடவுளின் நினைவை அறவே மறந்து, மங்கையின் நினைவையே முழுதுங் கொண்டிருப்பான். ஆனால், இத் தலைமகனோ அங்ஙனமன்று; அச் சமயத்தும், அரனை மறவா உத்தமனென்பதை நன்கு விளக்கிக் காட்டுகின் றான். அம் மங்கையைக் கண்டு ஐயுற்ற மன்னன்,

"கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ "சிவனருளோ" அறியேனென் றதிசயித்தார்."

"நான் காணு மிவ்வுருவம் புண்ணியமெல்லாம் திரண்டு பெண்ணுரு வெடுத்து வந்ததோ, அன்றி மேகம் போன்ற கூந்தலையும், விற்போன்ற புருவத்தினை

யும், குவளை மலர் போன்ற கண்களையும், பவளம் போன்ற இதழையும், மதி போன்ற முகத்தையும், கொடி போன்ற இடையையுமுடைய மனதைக் கவரும் ஓர் அற்புத உருவமோ, அன்றி என் மனது தன்னிடத்தில் நிலைத்து நிற்கின்றதா, அல்லது மங்கையர்பால் மையல்கொண்டு மயங்குகின்றதா வென்று அறியும் பொருட்டு என்னாண்டானாகிய சிவபிரானது அருள்தா னிவ்வுருவமாகி வந்ததோ, ஒன்று மறிகிலேனே" யென் றதிசயங் கொண்டார்.

இங்கு, சேக்கிழார் அடியார்களுக்கும் ஏனையோருக்குமுள்ள வேறுபாட்டை நன்கு விளக்கி யிருக்கின்றார். ஓர் மங்கை தன்னைக் கண்டு மையல் கொள்கின்றா ளென் றறிந்த வொருவன், அச் சமயம் கடவுளைக் கருதான். அம் மங்கையிடத்து எப்படியும் தன் விருப்பத்தைத் தெரிவித்து, அவளது அன்பைப் பெற முயலுவான். அஃது பலிக்கவில்லையாயினே கடவுளின் உதவியை நாடுவான். ஆனா லடியார்க ளவ்வித மன்றென்பதை இனிது விளக்கி யிருக்கிறார். மேலும் இன்னொருண்மையையும் நன்கு வெளிப்படுத்தி யுள்ளார். "சிவனருளோ" என்னு மச்சிறிய சொற்றொடரில் அப் பெரிய உண்மையைப் புகுத்தி விளக்கி யுள்ளார்.

எவ்வாறெனில், ஒருவன் மற்றொருவனிடத்தில் பணியாளனாக விருக்கின்றான் என்று வைத்துக்கொள்வோம். அப் பணியாளனுக்குச் சிறிது நற்காலம் வருமாயின், அவன தன் யசமானனிடத்தி லிருந்து விலகித் தனியே ஆடம்பரங்களுட னிருப்பான். பின் தன் னெசமானனைக் கருதான். கண்ணெடுத்தும் பாரான். அஃது உலகவியல்பு. ஆனால் விழுமியோரோ அங்ஙனமன்று. தான் எத்தகைய உயர்நிலையை யடைந்த போதிலும், தனது ஆதி நிலையை தன்னுயி ருள்ளளவும் மறந் தொழுகார். அஃதேபோல் அடியார்களும் தமக்கு எத்தகைய உயர்நிலையும், இன்பமும் வரினும், தமது ஆண்டானாகிய கடவுளை இறையளவும் மறவார் என்பதையும், விழுமியோரினதும், இழிந்தோரினதும் குணங்களையும் ஒரு சொற்றொடரில் புகுத்தி புகட்டி யுள்ளார். இவ்விதம் சுருங்கச் சொல்லி விளங்கவைத்து, உயர்நீதி புகட்டுதலன்றோ இன்கவிகளின் மாண்பு! சேக்கிழார் காதற் செய்யுட்களிலும் கடவுளினது மாண்பையும், உயர்ந்தோரின் மேன்மையையும் ஆடிபோ லெடுத்துக் காட்டுகின்றார்.

நமது மன்னனைக் கண்ணுற்ற நங்கையின் மனமும் மாறுபட்டது. ஒரு காலு மில்லாத ஏதோ வோர் புத்துணர்ச்சி தோன்றியது. அப்பொழுது மங்கையர்க் கியல்பாயுள்ள அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களும் புனல்வழிப் புல்போல் தலைசாய்ந்து நின்றன. அன்பனைக் கண்ட அம் மங்கையும் ஐயமென்னுந் துறையி லிறங்கி அவரை, "விஞ்சையனோ, மாரனோ, முருகனோ, செஞ்சடை யண்ணல் மெய்யருள் பெற்றவனோ" என்றையுற்றாள். பின், இருவரும் தெளிவு, தேறல் முதலிய துறைகளை யெல்லாங் கடந்து. "பண்டைவிதி கடைகூட்ட "காதல்" என்னும் கயிற்றால் பிணைக்கப்பட்டனர்,

இரு காதலர்கள் மனதிலும் தங்கள் காதலைவிடப் பன்மடங்கு மேலாகக் கருதிய செஞ்சடை யண்ணல் பாலுள்ள அன்பு வலிந்தெழ, தங்கள் மையலை யொருவா றடக்கிக்கொண்டு கோட்டத்தினுட் புக்கனர். அப்பொழுது நம்மடியார், அம் மங்கை யாரென அருகிருந்தவரை வினவ, அவள் வானோர்க்கு மடையு வியலாத அழகுடைய "பரவை" என்னும் மங்கை என்று பகர்ந்தனர்.

பின், இருவரும் திருவாரூரரை அகமுற வணங்கித் தத்த மிருப்பிட மேகினர்.

*　　　　*　　　　*　　　　*

இரவு மணி எட்டிருக்கும். தண்மதி ஆகாயத்தில் உடுக்கணங்கள் புடை சூழ பவனி வருகின்ருன். எங்கு பார்த்தாலும் பசும்பொன் வாரித்தூற்றியது போன் றழகு பொலிகின்றது. ஆர்கலி மகிழ்ச்சி மிகுதியால் பொங்கி எழு கின்றது. வாவிகள், யாவும் பசும் பொன்னிறம் பெற்று ஒளிர்கின்றன. ஆம் பல்கள் தண்மதிக்கு முறுவல் பூத்த முகத்துடன் நல்வரவு கூறுகின்றன. ஏனைய மலர்கள் தங்கள் தங்கள் நறுமணங்களாகிய இறைப் பொருட்களைச் சந்திரனுக்குக் கொடுப்பன போன்று நறுமணம் வீசுகின்றன. திருவாரூர்ப் பெருநகரம் மிகப் பொலிவுற்று மிளிர்கின்றது. மாந்தர்கள் யாவரும் மகிழ்ச்சி மிகுதியால் அங்கு மிங்கும் நடமாடுகின்றனர். காதலர்கள், பூங்காவனங்களில் காதல் மணங்கமழ உரையாடி மகிழ்கின்றனர்.

இவ்வாறு எல்லோரு மின்புற்றிருக்க, அவ்வூர்த் தேவாசிரிய மண்டபத் தில், ஒரு அரனன்பர் மாத்திரம் கவலை குடிகொண்ட முகத்தினராய், தனிமை யாக ஒருவருடனும் பேசாது, ஊணுங் கொள்ளாது, இருந்தவிடம் விட் டசையாது ஏதோ ஆலோசனையி லாழ்ந்திருக்கின்ருர். அவர் தம்முள் ஏதோ கூறுகின்ருர். அது யாதென்று நோக்குவாம்.

"ஆஹா! என்னே அம் மங்கையினழகு! அவளைப் பார்த்தால் பசி யென் பதுகூட வருடக்கணக்கிற் கெழாதே. என்னே! அவளது முகத்தின் பொலிவு! கண்களின் மருட்சிதா னென்னே! மூக்கினமைப்பிற்கு எதைத்தான் ஒப்பிடலாம். இதழைப் பவளத்திற் கொப்பிடலாமா? அல்லது பவளத்தை இவளது இதழிற் கொப்பிடலாமா? ஆஹா! அவளது நடையினழகை என் னென் றுரைப்பேன்! அத்தகைய மடமான் நான் கோயிலினின்று வெளி வருதற்கு முன் எவ்விடமோ மின்னல்போல் மறைந்து விட்டனளே! அவளை எங்கு சென்று காண்பேன். நாளையும் கோவிலுக்கு வருவாளோ! அறியேனே! அவளது பெயர். ஆஹா! என்ன இன்பமாகிய பெயர். "பரவை." அவளது பெயருக்கொப்ப பறவைபோற் பறந்துபோய் விட்டாளே!

ஆ! ஈசா! முப்புர மெரித்த முதல்வா! நீ அடியார்க் கடியனன்ருே! அடியனுகிய வடியேன் படும் பாட்டைக் குறித்து நீ சிந்தியா திருப்பதழகோ? உன்னையன்ருே யான் அல்லும் பகலும் அனவரதமும் தஞ்சமென் றடைந் திருப்பது? தந்தையும் தனித்தாயும் நீ யன்ருே அடியேனுக்கு. மகவு மனங் கவல்வதைக்கண்டு மதியா திருப்பனோ அருமைத்தாய். என் கண்முன் உன் னருளாகிய பொற்கொடியைக் காட்டி மறைத்து விட்டாயே! இது உனக் கழகாகுமா? ஆசைகாட்டி மோசம் செய்யலாமா? அடக்க வியலாத அரக்கர் களை யெலா மடக்கிய வுனக்கு என் கவலையை மாற்றுதலரிதா! அம்மங் கையை யான் எங்கு சென்று தேடுவேன்? யாரைக் கேட்பேன்? நீயலாது எனக்கு வேறு தஞ்சமுண்டோ? அன்றொருநாள் 'தோழமையாக வுனக்கு நம்மைத் தந்தனம்' என்று கூறினையே! இதுதான் தோழன்து உண்மைத் தன்மையோ? நண்பன் வருந்துங்கால் பார்த்தின்புறுதல்தான் "தோழமை" என்பதி னிலக்கணம் போலும். உடுக்கை யிழந்தவன் கைபோலே ஆங்கு இடுக்கண் களைவது அன்ருே நட்பு. அதை விடுத்து நீ, நான் வருந்தி

வேண்டியும் செவிசாய்க்கின்றா யில்லையே. உம், உன்னைச் சொல்வதிற் குற்ற மின்று. நஞ்சுண்ட நெஞ்சனன்றோ ! அந்த மனவுறுதி எங்கு செல்லும் !

நீ, 'நாமுன்பு தொண்டுகொண்ட வேள்வியிலன்று நீ கொண்டகோலம் என்றும்புனை' என்று உத்தர விட்டாயே. நான் எதற்கு இத்தகையழகு படுத்திக் கொள்ளுகின்றேன். என் காதலி கண்டின்புற வேண்டுமென்று தானே. ஏனையோர் என்னை மதித்தாலென்ன, மதியாவிடிலென்ன? எனக்கெல்லாம் ஒன்றே. என் காதலி கண்டின்புறாது இவ்வாபரணங்களும் ஆடைகளும் எனக்கெதற்கு ? ஏ! விடையேறு பங்கா! நீ அருள் மிக்க பெருமானுயிற்றே. என் மட்டில் நினது அருளென்ன வற்றிவிட்டதா? என்னிடத்தில் அருளற்று வேற்று முகத்துட னிருப்பினும், உன்னிடந் தோற்று நிற்க வாற்றாத விரோதிகள் என்னைப்படுத்தும் பாட்டையாவது தடுக்கக் கூடாதா?

"தந்திருக்கண் ணெரி தழ லிற்பட்டு
வெந்த காமன் வெளியே யுருச்செய்து
வந்தென் முன்னின்று வாளி தொடுப்பதே
யெந்தை யாரரு ளிவ்வண்ணமோ........"

ஹே! ஈசா! எந்தையே! உனது திருக்கண் பார்வைக் காற்றாது சாம்பராய் வீழ்ந்தழிந்து, உருவிழந்த அந்த காமன் என்மேல் மலர்வாளி தொடுத்து வாட்டுகின்றானே! இது உனக்குச் சிறிதும் தெரியவில்லையா? உனது விரோதி உனது அடிமையாகிய வென்னை யாட்ட, நீ பார்த்துப் பேசாதிருக்குமாறுள்ள தீங்குனக்கு நான் ஒன்றும் செய்தறியேனே! தேவர்பாலுள்ள அன்பின்மிகுதியாலன்றோ, அன்று நீ அயனும், மாலும் போலும் மறுத்த ஆலகால விடத்தை ஆலசியமாகப் பருகுகிறாய். என் மட்டி லுனக் கவ்வரு ளில்லாமற் போனதென்னே!"

பின் தண்மதியை நோக்கி,

"ஆர்த்தி கண்டுமென் மேனின் றழற்கதிர்
தூர்ப்ப தேயெனைத் தொண்டுகொண் டாண்டவர்
நீர்த் தரங்க நெடுங்கங்கை நீண்முடி
சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி."

"ஏ! மதிகெட்ட மதியே! எனது, பரவைபா லுள்ள ஆற்றாமையைக் கண்டும், என்மேல் நீ, நினது அழல்போன்ற கிரணங்களை வீசுகின்றனையே. இது உனக்குத் தகுமா? உன்னிடத்து, என்னை ஆண்டுகொண்ட சிவபிரானின் தலைமீதிருந்தும் அதற்கொத்த தண்ணருளில்லையே! பின் எங்ஙன முன்னைத் தண்மதி என்றழைப்பது! நினக்குத் தண்மதி என்னும் பெயர் வைத்தவர்கள் உண்மையில் மதியற்றவர்கள். உன்னிடத்தில் தண்மைத் தன்மை இறையளவுமில்லை. உன்னிடத்தி லிருப்ப தவ்வளவும் கொடுந்தன்மையே உனக்குப் புறத்தழகே யொழிய அகத்தழகு இல்லை. நீ புறமே எவ்வளவு வெண்மை நிறத்துட னிருக்கின்றாயோ அதைவிட ஆயிரம் மடங்கு உன்னகம் கறுத்திருக்கின்றதே பேதை மதியே!" என்று வசை கூறுகின்றார். இஃது பிரிவுற்ற காதலர்கள் தன்மை யன்றோ!

இவ்விரண்டு பாக்களிலும் சேக்கிழார், ஒருவனுக் கிழிவுகாலம் வரு

# புறநானூற்றுப் புதையல்கள்

(A. நாகசுந்திரம் ஐயர்.)

## பாவலரும் காவலரும்.

"வடவேங்கடந் தென்குமரி ஆயிடைச் செழித்து வளர்ந்தது நம் தமிழ்நாடு. இத் தமிழ்நாட்டைச் சீருடன் செங்கோல் செலுத்தியவர் சேரர், சோழர், பாண்டியர் என்ற முடியுடை மன்னர் மூவருமாவர். இவ்வேந்தர்களுடன் கலா விநோதராய்க் காலங்கழித்தும் அவர்களின் பண்புடை வாழ்க்கையைப் பாராட்டிப் புகழ்ந்து பாடியும் பரிசு பெற்ற புலவர்கள் பலர். இம் மூவேந்தரே யன்றியும் பல குறுநில மன்னரும் நறுந்தமிழ்ப் புலவர்களை நன்கு ஆதரித்து வந்தனர்.

### பண்டைப் புலவர்களின் பொது இயல்பு

பறவைகளையும், பண்டைத் தமிழ்ப் புலவர்களையும் ஒருவாறு ஒப்பிடலாம்.

பழுத்த மரங்களை நாடிச்செல்லும் பறவைகளைப் போலவே, புலவர்களும், கொடைக்குணம் உடையோர் உள்ள இடத்தைத் தேடிச் செல்வார்கள். பாதையின் துன்பத்தையும் தூரத்தையும் கருதமாட்டார்கள். தேடிச் சென்ற வள்ளல்களைப் புகழ்ந்து பாடி அவர்கள் கொள் எனக் கொடுத்ததைப் பெற்று உள்ளம் மகிழ்வார்கள். அதைக்கொண்டே தன் சுற்றத்தாரை உண்பிப்பார்கள். பக்ஷிகளைப் போலவே நாளைக்கு வேண்டுமென்ற எண்ணம் கொள்ளாது அள்ளிக் கொடுப்பார்கள்.

> "வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
> நெடிய வென்னாது சுரம்பல கடந்து
> வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
> பெற்றது மகிழ்ந்து சுற்ற(ம்) அருந்தி
> ஓம்பா(து) உண்டு கூம்பாது வீசி"
> ....................................... (புறம் 47)

[வள்ளியோன்=வரையாது கொடுப்பவன்; புள்ளிற் போகி=பறவை

---

மாயின், உலகத்தார் அவனைத் தேற்றுவதற்கு மாறாக இன்னுஞ் சிறிது தன் புறத்துவார்கள் என்னு முண்மையை தெற்றெனை விளக்கியுள்ளார். மேலும், "ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்" என்னு முண்மையையும் இவ் விருபாக்களின் மூலம் நன்கு வெளியாகின்றது.

போலப் போய்; வடியா நா—திருந்தாத நாவு; வல்லாங்குப் பாடி—தாம் வல்லபடி பாடி;]

என்ற பாடலும் இவ் வுண்மையை வலியுறுத்தும்.

## கொடுப்பவர் பெருமையும் கொள்பவர் நிலைமையும்

யாசிப்பவர் எதனைப் பெறினும் கொள்வார்கள். குறைவு என்றும் நிறைவு என்றும் கூறார்கள். ஆனால் கொடைப் பொருளின் ஏற்றத்தாழ்வை அக் கொடையாளனே அறிய வேண்டும்.

என் சிறுமையி(ன்) இழித்து நோக்கான்
தன் பெருமையி(ன்) தகவு நோக்கிக்
குன்றுறழ்ந்த களிறென்கோ
கொய்யுளைய மாவென்கோ
மன்று நிறையு நிரை யென்கோ (புறம் 387)

[மா—குதிரை; நிரை—பசுக் கூட்டம்; தகவு நோக்கி—மேம்பாட்டை யறிந்து.]

என்ற பாட்டு இவ் வுண்மையைத் தெளிவு படுத்துவது காண்க.

முற்காலத்து அரசர்கள் யாசிக்கும் இரவலர்களை இழித்து நோக்காமலும் அவர்களின் எளிய நிலைமைக்கு ஏற்றது ஈயாமலும் தம் பெருமைக்கேற்கவே பசுக்களையும் குதிரைகளையும், யானைகளையும் இன்ன பலவும் கொடுத்து மகிழ்வார்களாம்.

ஒளவை ஒருசமயம் அங்கவை சங்கவை என்னும் பெண்களுக்கு இடையர்களின் வழக்கப்படி சீதனம் கொடுக்கும் பொருட்டு சேரனை ஓர் ஆடு கேட்டனள். அவன் பொன்னால் செய்யப்பட்ட ஆடு ஒன்று கொடுத்தான். அதைப் பெற்றுக் கொண்டு ஒளவை,

"சிரப்பான் மணிமவுலிச் சேரமான் தன்னைச்
சுரப்பாடு யான்கேட்கப் பொன் ஆடொன்(று) ஈந்தான்
இரப்பவ(ர்) என்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவார் த(ம்) கொடையின் சீர்"

[சிரப்பான்—சிரத்தினிடத்திலே; சுரப்பாடு—பால் சுரக்கிற ஆடு;]

என்று பாடி அருளினர். இவ்வாறு ஈவதும் கொள்வதும் பண்டை காலத்தியற்கை. அன்றி ஓர் வள்ளலைப் பாடிச்சென்ற புலவருக்கு அவ்வள்ளல் ஒன்றுமே கொடுக்கவில்லை என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுதும் அப்புலவன் வருந்துவதில்லை. அவ் வள்ளலைச் சிறிதும் வெறுப்பது இல்லை.

புள்ளும் பொழுதும் பழித்த(ல்) அல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியலர் (புறம் 204)

என்ற பாட்டின்படி, 'நாம் நல்ல நேரத்தில் புறப்படவில்லை. நாம் வரும் பொழுது இடையில் சகுனத்தடையாகப் பறவைகள் பறந்தன அன்றோ! அதன் பலன் இது' என்று தம்மைச் சமாதானம் செய்து கொள்வார்கள்.

இப்புலவர்களின் உயர் குணத்தைப்பற்றி மேலும் ஆராய்வோம். தன்னைக் காப்பவன் பெருமை சிறுமைகளைத் தன்னதாகவே கொள்வார்கள். தன்னைக் காப்பவன் தன்னைப் புகழ்தல் ஒன்றே தனக்குப் பெரும் பேறெனப் பூரிப்பார்கள். பிறருக்குக் கெடுதி செய்வதைக் கனவிலும் கருதார்கள். ஆனால்தான் கற்றகல்வியைக் குறைகூறி இகழ்பவன் எவனாயினும் அவனுடன் வாது புரிந்து தமது கல்வியால் அவன் நாண வென்று மிக்க கருவத்துடன் திரிவார்கள். ஆகையால் செவிக்கினிய அளிக்கும் இக்கவி யரசர்கள் புவிக்கினிய அளிக்கும் புவியரசர்களைப் போலவே போற்றத் தக்கவர்கள் அன்றோ? இவ்வரிய கொள்கைகள் பின்வருஞ் செய்யுளில் சித்திரித் திருத்தல் காண்க.

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற்போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற(ம்) அருத்தி
ஓம்பா(து) உண்டு கூம்பாது வீசி''
வரிசைக்கு வருந்து(ம்)இப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந்தன்றோ! இன்றே திறப்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி
ஆங்கினி(து) ஒழுகின் அல்ல(து) ஓங்குபுகழ்
மண்ணாள் செல்வ(ம்) எய்திய
நும்மோரன்ன செம்மலு முடைத்தே. (புறம் 47)

[நண்ணார்=பகைவர்கள்; அண்ணாந்து=தலை நிமிர்ந்து;]

பண்டைக் காலத்து அரசர்கள்

செங்கோலிற் சிறந்தவர்கள். குடிகள் இன்புறுதலே கோலின்பயன் என்று குணமுடையவர்கள். கொடையில் சிறந்த வள்ளல்கள் ஆதலால் அவர்களைப் பல புலவர்களும் இரவலர்களும் நாடிவந்து கூடி நிற்பார்கள்.

மலையினிழிந்து மாக்கட(ல்) நோக்கி
நிலவரை யிழிதரும் பல்(ஆ)று போலப்
புலவரெல்லா(ம்) நின்னோக்கினரே (புறம் 42)

எவர் வந்து எவ்வமயம் எதைக் கேட்டாலும் இல்லை என்னாது கொடுக்கும் கொடையாளிகள். இதை விளக்கவே கபிலர் என்ற புலவர் 'நாள் பாராது கெட்ட நாளிலே இராகு காலத்திலே புறப்பட்டு இடையில் காக்கை இடம் போதல் முதலான சகுனத் தடைகளுடன் ஓர் அரசனிடம் ஓர் புலவன் செல்கிறான். அப்படிச் சென்ற அவன் அரசனின் சமயம் அறியாமல் புகுந்து முறையறியாமல் உரையாடுகிறான். அப்பொழுதும் அவ்வரசனால் அவன் குறைகள் நீக்கப்படுகின்றன' என்று அவ்வரசனின் கொடைச் சிறப்பை,

"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குவர் அல்லர்" (புறம் 124)

[புள்ளிடை தட்ப=புள் நிமித்தம் இடையே நின்று தடுக்க;]
என்ற பாடலில் புகழ்ந்து கூறுகிறார்.

அன்றியும் அவர்கள் புலவர்கள் தங்களைப் புகழ்வதும் அவர்களால் பாடல் கொள்வதுமே பெரும்பேறெனக் கொண்டார்கள். சேற்றின் கண்ணே தாமரை மலருகிறது. அதில் பல இதழ்களோடு கூடிய மலர்கள் புஷ்பிக்கின்றன. அவைகளிற் சிலவே பலருக்கும் பயன்படுகிறது. ஆனால் அவைகளில் பயன்படாது அழிபவை பல. அதுபோலவே சிறந்த குடியில் பிறந்த உயர்ந்த வேந்தருள்ளும் பிறருக்குப் பயன்பட்டுப் புலவரால் புகழப்படுவோர் மிகச் சிலரேயாவர். அப்படிப் புலவரால் பாடப்பாடும் புகழுடையோர் ஆகாயத்தின் கண் பாகனால் செலுத்தப்படாத விமானத்தில் ஊருவார்கள்.

"உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ(ன்) ஏவா வான வூர்தி
யெய்துப வென்ப த(ம்) செய்வினை முடித்தே (புறம் 27)

[மரையிலை=தாமரை இலை; வலவன் ஏவா=பாகனால் செலுத்தப்படாத; வான வூர்தி=ஆகாய விமானம்;]

இவ்வுண்மை கண்ட நம் தொன்மையரசர்கள் புலவர்களைப் போற்றுவதையே பெரும் பேறெனக் கொண்டார்கள். அவர்களையே பெருநிதியெனக் கருதித் தங்கள் அவையில் இருத்தி ஆதரித்தும் வந்தார்கள். அவ்வாறு புலவர்கள் பாடாதிருப்பதும் இரவலர்க் கீயாதிருப்பதும் பெருங்குறை என உணர்ந்த ஓர் பாண்டிய வேந்தன் பாடிய பாவின் நயத்தைப் பாருங்கள்.

ஓங்கிய சிறப்பி(ன்) உயர்ந்த கேள்வி
மாங்குடி மருத(ன்) தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் நிலவரை
புறப்போர் புன்கண் கூற
விரப்போர்க் கீயா இன்மையா னுறவே (புறம் 72)

[இரப்போர்க் கீயா இன்மை=யாசிப்பவர்களுக்கு கொடாத வறுமை.]

இவ்வாறு பாவலர் பாவின் திறமும் காவலர் கோலின் குணமும் கூடி நின்ற காரணங்கொண்டே, நம் தமிழன்னை தலை நிமிர்ந்து நின்றாள். ஒப்பற்ற முச்சங்கங்களில் ஒளியுடன் விளங்கினாள். அவ்வொளியும் உலகெலாம் பரவி உயர் நிலையில் நின்றது. ஆனால் இந்நாளிலோ ?

# "மணிமேகலை" ஆராய்ச்சி

R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.


(752-வது பக்கத் தொடர்ச்சி.)

## 5. மதக் கொள்கைகள்.

### பௌத்தர்களின் தருக்க வகை.

பௌத்த மதத்தவர்கள் உண்மைப் பொருளை அறிந்திடக் கொண்டிருந்த தத்துவ விசாரணை மார்க்கங்களைத் தமிழ் நாட்டில் அக்காலத்தில் பரவியிருந்த முறைப்படி, 'மணிமேகலை' நூலாசிரியர் சாத்தனார், தமது நூலில் விரிவாக அறவணவடிகள் கூறியவாறு கூறியுள்ளனர். அதன் சுருக்கம் வருமாறு:

அறவணவடிகள் பௌத்த மதத்தின் முதல்வன் ஆதி ஜினேந்திரனென்றனர். இம்மதம் கொண்டுள்ள அளவைகள் பிரத்யக்ஷம், அனுமானமென்ற இரண்டென்பர். அவர்கள் வாதம் செய்தலின் முறை ஐந்து வகைப்படும் முறையே அவை, பக்கம், ஏது, திருட்டாந்தம், உபநயம், நிகமன மெனப்பட்டது. இவ்வைந்தனுள் கடையுள்ள இரண்டும், திருட்டாந்தத்திலே சென்றடங்குமெனச் செப்பி, முனிவர் முதலுள்ள மூன்றின் நித்திய அநித்தியத் தன்மைகள் இத்திறத்தின என்பதும் கூறி, அம்மூன்றின் உபபாகங்களாக உள்ளவை இவையிவை யென்றும் அவற்றின் தன்மைகள் இத்தகையன வென்றும் கூறுவாராயினர். அவர் கூறியபடி, பக்கப்போலி, ஏதுப்போலி, திருட்டாந்தப் போலியென போலி வகைகள் மூன்றாகும். பக்கப்போலி, பிரத்தியக்க விருத்தம், அனுமான விருத்தம், சுவாசன விருத்தம், உலோக விருத்தம், ஆகம விருத்தம் அப்பிரசித்த விசேடணம், அப்பிரசித்த விசேடியம், அப்பிரசித்த உபயம், அப்பிரசித்த சம்பந்தம் என்ற ஒன்பது வகைப்படும். ஏதுப்போலி, சித்தம், அநைகாந்திகம், விருத்தமென்ற மூன்றாகும். அவற்றுள் சித்தமென்பது உபயாசித்தம், அன்னியதா சித்தம், சித்தாசித்தம், ஆச்சரிய சித்தமென நான்காகும். அநைகாந்திகம், சாதாரணம், அசாதாரணம், சபக்கதேச விருத்தி விபக்க வியாபி, விபக்கைத்தேச விருத்தி சபக்க வியாபி, உபயைகதேச விருத்தி, விருத்த வியாபிசாரி என்று அறுவகைப்படும். விருத்தம், தன்மச்சொரூப விபரீத சாதனம், தன்ம விசேட விபரீத சாதனம், தன்மிச் சொரூப விபரீத சாதனம், தன்மி விசேட விபரீத சாதனமென நான்காம், திருட்டாந்தம் ஆபாசங்கள் வாய்பாடு என இருவகைப்படும். இவற்றின் விரிவும் அவற்றின் இலக்கணையும், மற்றும் மேற் கூறியவைகளின் இலக்கணையும் நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. விளக்கமாக அங்கு கண்டுகொள்க. இவ்விதங்களாக பௌத்தர்கள் தங்களது மதத்தினைக் கண்டு அறிந்துகொள்ளக் கொண்டுள்ள தருக்க முறைகள் யாவும் ஒழுங்குபட

ஒன்றன்பின் ஒன்றாக ஆசிரியர் கூறியுள்ளனர். அவற்றின் முழு விவரங்களும் வல்லார் வாய்கேட்டு அறியவேண்டும்.

சாத்தனார், பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதையில், தாம் அறிந்து உணர்ந்தபடியோ, அன்றித் தமிழ்நாட்டில் பரவி யிருந்தபடியோ, புத்த மதத்தவரின் உபதேசங்களையும், அவர்கள் கூறும் நான்கு வாய்மைகளின் தன்மைகளையும், அவற்றைத் தெளிய அறிதற்குச் சாதகமாகிய பன்னிரு நிதானங்களின் தோற்ற வொடுக்கங்களையும், மெய்யறிவைப் பெற்று இச்சைக்கு இடங்கொடாது, எப்பொருளிடத்தும் அன்பு பூண்டிருந்து, பிறவியைக் களைந்திடு முபாயங்களையும் தெளிவாகக் கூறுகின்றனர். இவ்விஷயங்களை, கந்திற் பாவையின் வாயிலாக வருவதுரைத்த காதையிலும்; அறவணர் அரசிக்குக் கூறியதாக சிறைவிடு காதையிலும்; மீண்டும் கண்ணகித் தெய்வத்தின் வாயிலாகவும் மும்முறையாகச் சாத்தனார் ஒன்றினுமொன்று மனதில் நன்கு பதியுமாறு கூறியுள்ளனர்.

## புத்த மந்திரமும் சங்கமும்.

தானம் செய்தலைத்தாங்கி, சீலத்தில் தலைசிறந்து நின்று, போன பிறவியின் செய்திகளை யுணர்ந்திட்டு, முத்திர மணிகளாகிய புத்தனையும், அவன் கூறிய திரி பீடகத்திலுள்ள தருமங்களையும், துறவறம் பூண்ட பௌத்த முனிவர்களின் கூட்டமாகிய சங்கத்தையும், சரணமடைந்து வணங்கிநின்ற மணிமேகலைக்கு, அறவணவடிகள் உபதேசங்கள் செய்ததாக உள்ளது. சீலத்தின் வகைக் கீழே குறிக்கப்பட்டுள்ளன. பௌத்தர்கள் "புத்தம் சரணங்கச்சாமி, தருமம் சரணங்கச்சாமி, சங்கம் சரணங்கச்சாமி" யென்ற இம் மூன்றினையும், மந்திரங்களாகக் கொண்டுள்ளனரென்பது இதனால் விளங்கும். புத்த சங்கத்தில் இருபாற்பட்ட மக்களுமிருப்பர். ஆண் பாலருக்குப் பிக்ஷுக்களென்றும் பெண் பாலருக்குப் பிக்குணியென்றும் பெயர். மணிமேகலையும் பல விடங்களிலும் பிக்குணிக்கோலங் கொண்டவகை இந்நூலில் கூறப்படுதல் காண்க. இச் சங்கங்களில் பதின்மருக்குக் குறைவின்றி இருத்தல் வேண்டு மென்பதும்; பிக்குணிகள் பிக்ஷுக்கு அடங்கி நடக்கவேண்டு மென்றும் விதிக ளுண்டென்பர். இத்தகைய சங்கம் புத்தராலேயே முதன் முதலாக உண்டாக்கப் பட்டதென்பர். இச் சங்கங்களில் சாதிமுறை வேற்றுமையொன்றும் கவனிக்கப் படாதென்பர்.

## புத்தனது அவதாரம்

"உலகில் ஞான அறிவு வறிதாக, உயிர்கள் அலைந்த காலத்து, அமரர்கள் குறையிரந்துவேண்டத் தனது இருப்பிடமாகிய துடிதலோக மொழித்து இவ்வுலகில் தோன்றி, போதி மரத்தின் கீழ் பொருந்தி இருந்தது, மாரனை வென்ற வீரனும், காமம் வெகுளி மயக்கமாகிய முக்குறும்பு முற்ற வறுத்த புத்ததேவன் உரைத் தருளிய வாய்மையே இவையாகும். இவ்வறத்தையே இறந்த காலத்திலும் எண்ணில்லாத புத்தர்கள் தோன்றி அருளோடும் திரு வாய் மலர்ந்தருளினர்" என அறவண வடிகள் தரும மூரைத்தற்கு முதலாகக் கூறுவாராயினர். இவற்றின் உண்மை புத்த ஜாதக கதைகளில் விரிவாகக் காணலாம். இவ்வாறே முக்கால அறிவும் கொண்ட பௌத்த முனிவர்கள் மக்களை நல்வழிப் படுத்து மெண்ணத்தோடு பலருக்கும் உபதேசம் செய்து வந்தன ரென்பது இந் நூலில் கூறப்படுதல் காண்க. சங்க தருமர் சுதமதிக்

கும் அவன் தந்தைக்கும் தருமோபதேசஞ் செய்த வரலாறும், தரும சாவகன் புண்ணியராசனுக்கு நல் லுபதேசம் புரிந்த செய்தியும், பிரும தருமர் இராகு லனது தந்தையான அத்தி பதிக்கு அற முரைத்தன ரென்பதும் வந்துள்ளன. அவதார புருடன் தோன்றுவ னென்பதைச் சாத்தனர்,

"உயிர்க ளெல்லா முணர்வு பாழாகிப்
பொருள்வழங்கு செவித்துளை தூர்ந்தறி விழந்த
வறந்தலை யுலகத்துத் தறம்பாடு சிறக்கச்
சுடர் வழக்கற்றுத் தடுமாறு காலை"யில்

இளவள ஞாயிறு தோன்றிய தென்ன புத்தன் தோன்றிய தாகக் கூறியுள்ள னர். (10 : 7 : 10). கௌதம புத்தர் பிறப்பதற்கு முன், தருமம் குறைந்து அஞ்ஞான இருள் மூடியிருந்த ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு புத்தரா கத் தோன்றி, ஞானத் தீயைப் பரக்கச் செய்தன ரென்பது மேலே கூறிய தால் விளங்கும். பௌத்த நூற்களின் துணிவும் இவ்வாறே இருத்தல் காண்க. கௌதம புத்தரும் தன்னை இருபத்தைந்தாவது புத்தராகக் கூறுவர்.

அவதார புருடன் தோன்றுங் காலத்தில் பல நன்னிமித்தங்கள் நிகழு மென்பதும், பௌத்தராஞோரின் கொள்கை. இவ் விஷயம் சக்கரவாளக் கோட்டத்து தேவரெல்லாம் ஒருங்கு திரண்டு துடிதலோகத்து மிக்கோன் பாதம் தொழுது வேண்ட இருள்பரந்து கிடந்த மலர் தலை யுலகத்து, விரி கதிர்ச் செல்வன் தோன்றினன் எனவும் குறித்துள்ளது காண்க. பகவத் கீதை யிலும் மாயன்,

"பரித்ராணாய சாதூனாம்
விநாசாய சதுஷ் கிருதாம்
தர்ம ஸம்ஸ்தாப னார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே"

என அதர்மம் மேலிட்டு தர்மம் சீர் குலைந்த காலத்தில் அறத்தை நிலை நாட்ட வும், சாதுக்களைக் காத் தளித்திடவும் யுகந்தோறும் தான் அவதரிப்பதாகக் கூறுவது நோக்குக. புத்த தரும சங்கங்களைக் குறித்து பல விஷயங்கள் ரைஸ் டேவிட்ஸ், மாக்ஸ் முல்லர், ஓல்டன் பர்க் முதலிய ஐரோப்பியர்கள் எழுதியுள்ள நூற்களில் கண்டறிக.

## புத்தன் பிறந்த தினம்.

இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் பிருந்த கௌதம புத் தன் சற்றேக் குறைய அவதரித்த தினமும், போது அறிவு இழந்து மெய்ஞ் ஞானம் பெற்ற தினமும், வைசாக சுத்த பௌர்ணமையாதலால் அதனை விளக்குதற் பொருட்டுச் சாத்தனர் "மதி நாண் முற்றிய மங்கலத் திருநாள்" (10 : 83) என்றனர். மற்றும் அவன் பிறந்த தினம்,

"இருதிள வேனிலி லெரிகதி ரிடபத்
தொருபதின் மேலுமொரு மூன்று சென்ற பின்
மீனத்திடை நிலை மீனத்தக வையிற்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்"

என்றும் (11 : 40 : 3) கூறியுள்ளனர். 'இருதிள வேனில்' என்றது சித்திரை

வைகாசி மாதங்களாகிய இளவேனில் பருவத்தை. 'எரிகதி ரிடபம்' என்ற தனுல் சூரியன் மிக்க வெம்மையைச் செய்கின்ற மாதமாகிய வைகாசியைக் குறித்தது. நட்சத்திரங்களுள் நடுவில் நிற்றலை யுடையதான விசாக நட்சத்திரத்தில் புத்தன் பிறந்த தாகக் கூறப்பட்டுள்ளது. ஆசிரியர் இதனை "ஒரு பதின் மேலு மொரு மூன்று சென்றபின்" என்ற அடியில் இருபத்தேழு நட்சத்திரங்களுள் பதின்மூன்றாவதாகிய நட்சத்திரத்தில் பிறந்தன னென்பர். தற் காலத்திலுள்ள நட்சத்திர முறைப்படி பதின்மூன்றாவது நட்சத்திரம் அஸ்தமாகும். புத்தனின் நட்சத்திரம் விசாக மென்று கூறப் படுவதாலும், ஆசிரியர் அதனை பதின் மூன்றாவதாகக் கூறுவதாலும், அவர் கார்த்திகை நட்சத்திரத்தை முதலாக வைத்து எண்ணி யிருப்பது விளங்கும். முறை தவறிக் கூறும் இஃது இழுக்குடையதாகா தென்று கற்றறிந்தோர் கூறுவது காண்க. புத்தன் பிறந்த தினத்தை பௌத்தர்கள் திருவிழாவாகக் கொண்டாடுவர். கபிலையம்பதி பௌத்தருக்கு முக்கியமான புண்ணிய க்ஷேத்திர மென்பது, அப் பதியிலேயே புத்தன் மீட்டும் பிறந்து அறங்களைப் போதிப்ப னென்பதும் இந் நூல் கூறும். (28 : 141 :4). புத்தன் மீட்டும் பிறந்திடு மாண்டை,

> "ஈரெண் ணூற்றோடீ ரெட்டாண்டிற்
> போறிவாளன் றோன்றும்" (12 : 78 : 8)

என்று 1616 வருடங்களுக்குப் பிறகு தோன்றுவ னெனக் கூறப்பட்டுள்ளது. இவ்வாண்டு எந்த சகாப்தத்தைச் சேர்ந்த தென்பது நன்கு புலப்பட வில்லை. இதனை சரித்திர ஆராய்ச்சியாளர் விளக்க வேண்டும்.

## போதி மரம்.

மேலே துடிதலோக மென்றது ஆறு வகையினதாகிய தெய்வ லோகங்களி லொன்று. இது போதிசத்துவர் கௌதம புத்தராக உலகில் அவதரிப்பதற்கு முன்பு இருந்த இடமென்பர். உலக இன்பங்களில் வெறுப்புற்றுச் சித்தார்த்தர் தனது 29 ஆண்டில் மனைவி யசோதரையையும் இளஞ் சிறுவனையும் விட்டுத் துறவியாகி, உண்மை யறிவைப் பெற்றிட பல விடங்களுக்குஞ் சென்று, பல துறவிகளையும் கண்டு அவர்கள் கூறுவன கேட்டு அறிந்து முடிவாகப் போதி மரத்தடியில் சில சமாதி நிலையிலிருந்து, பூர்வ அறிவு வரப்பெற்று, சென்ற பிறவிகளை உள்ளவாறு அறிந்திட்டு, ஞானம் பெற்றுத் தத்துவ ஆராய்ச்சி செய்த இடம் போதி மரத்தடி யென்பர். ஐந்து கிளையோடு இம் மரமிருப்பதாகச் சிலப்பதிகாரம் கூறும். (நாடு. 11) இம் மரத்தை பௌத்தர்கள் மகாபோதி விருக்ஷ மென்பர். எங்கு இருப்பினும் அவர்கள் இம் மரமுள்ள திசையை நோக்கித் தொழுவர்.

## புத்தனது புகழ்.

'மாரனை வென்ற வீரனெனப்பட்ட புத்தனை, இந் நூலில் சாத்தனார் பல விடங்களிலும் அவனது உயர்ந்த குணங்கள் விளங்குமாறு புகழ்ந்து கூறி யுள்ளனர். "புத்தன் இயல் குணன் ; ஏதமில் குணப்பொருள்; உலக நோன்பிற் பல கதியுணர்ந்து தனக்கென வாழாப் பிறர்க் குரியாளன். உயிர்ப் பான்மைகள் இன்பச் செவ்வி யடையும்படி அருளறம் பூண்டவன். அறக் கதிராழி திறப்பட வுருட்டிக் காமற் கடந்த வாமன்" என உவவனத்தில் உதய

குமானுக்குச் சுதமதி கூறுமிடத்தும் (5; 71. 9) மணி பல்லவத்தில் மணி மேகலா தெய்வம் "புலவன்; தீர்த்தன், புண்ணியன். புராணன். உலக நோன்பின் உயர்ந்தோன். குற்றங் கெடுத்தவன், செற்றஞ் செறுத்தவன். மூற்றவுணர்ந்த முதல்வன். காமற் கடந்தவன். ஏமமானவன். தீ நெறி கடும் பகை கடிந்தவன். ஆயிர வார்த்தாழி யந்திருந்தடி," நாவாயிரமிலாது புகழு தல் அரிதென வியந்து கூறியதைக் கூறுமிடத்தும் (5; 98—105;) பாத்தி ரம் பெற்றபின் மணிமேகலை புத்தனது அடியை வணங்கி "மாரனை வெல்லும் வீரன். தீ நெறிக் கடும்பகை கடந்தோன். துறக்கம் வேண்டாத் தொல் லோன். எண் பிறக்கொழிய இறந்தோன். கண் பிறர்க்களிக்கும் கண் ணோன். தீ மொழிகடந்த செவியோன். வாய் மொழி சிறந்த நாவோன். நரகர் துயர்கெட நடப்போன். உரகர் துயர மொழிப்போன்" என்று வாழ்த் துதலையும், சாத்தனார் வெகு உருக்கமாகவும் அழகாகவும் கூறி யிருக்கின்றனர். புத்த தேவனும், அவனது மதத்தினரும் ஜீவகாருண்யத்தின் உயர்வையே வெகுவாக விளக்கிக் கூறி வந்தனர். மேலுள்ளவாறு புத்தன் அறக்கதிராழி யுருட்டின னென்றும் (5; 76) "ஆயிர வாரத்தாழிய" னென்றும் (5; 105) "அறவாழியாள்வோன்" (6; 11) என்றும் தருமமாகிய சக்கரத்தை உருட்டி யவ னென்றும் கூறுவது பௌத்தர்களின் வழக்கு.

தத்துவ ஆராய்ச்சிக் காதையில், சாத்தனார், பன்னிரு நிதானங்கள், அவற்றின் மீட்சி யொடுக்கம்: நான்கு கண்டங்கள்; மூன்று சந்திவகை; மூன்று பிறப்புவகை; அப் பிறப்பிற்கேற்ற மூன்று காலம்; அவற்றில் விளைந் திடும் குற்றம்; வினை, பயன், துன்பம் முதலியன; வீடு நால்வகை வாய்மை; ஐந்து வகைக் கந்தம்; ஆறு வகை வழக்கு, நான்கு நயன்கள், அவற்றின் பயன், நான்கு வகையாகிய வினு விடைகள் முதலிய பலவும் கூறி அவற்றில் ஒன்றற் கொன்று கொண்டுள்ள சம்பந்தங்களையும் நன்கு விளங்க உரைத்துத் தொடக்கமும் இறுதியுமில்லாது, பண்ணுனரின்றிப் பண்ணப்படாதாகி, போனது மின்றி வந்தது மின்றி, முடித்தலு மின்றி முடிவு மின்றி, வினை பயன் பிறப்பு வீடாகிய இவை யெல்லாம் தானேயாகிய பன்னிருந் தானங்க ளின் தன்மையை உள்ளவாறு அறிந்த பிறந்தவரில் எவரும், நிருவாணமாகிய பெரும் பேறறிந்தவ ராவர். அறியார் நரகிற்கே உரியவ ரென்றார். அப் பன் னிரு பொருள்களும் முறையே பேதமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பவம், தோற்றம், வினைப்பயன் என் பன திரிபிடகத்திலுள்ளவாறு இவை யாவும் விரிவாக, ஓல்டன்பர்க் என்ப வர் எழுதியுள்ள நூலில் கூறப்படுவது காண்க. ஆசிரியர் சாத்தனாரும் இவற் றைப் பல விடங்களிலும் குறித்துள்ளனர். (30-45-8)

### பேதமையும் செய்கையும்.

பேதமையாவது அறியாமை. உண்மைப் பொருள்களை உணராது மயங்கி, இயற்படு பொருளால் கண்டது மறந்து; முயற் கோடுண்டெனக் கேட்டது தெளிதல்.

செய்கையாவது செய்திடும் கருமம். மூன்று வகையினதாகிய உலகத்திலுமுள்ள பல்லுயிர்களும் அறுவகைத்தாகும். அவை மக்கள், தேவர், பிரம்மர், நரகர், விலங்கு, பேய் என்பன. அவர் தாம் நல்வினை தீவினை யென்ற இருவினையின் பயத்தால், சொல்லப்பட்ட கருவிற் சார்

வர். கருவினுட் பட்டபொழுதே தோன்றி, அவ்வினையின் பயன் வந்து பற்றிடும். நல்வினையாகிய மனப்பேரின்பமும் தீவினையாகிய கவலையுங் காட்டும். தீவினை யென்பது கொலை, களவு, காமம்; ஆகிய உடம் பிற் றோன்றுவன மூன்றும், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்லாத சொற்கள்; என்ற இவையாகிய சொல்லாற் தோன்றிடும் நான்கும்; வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சி, என உள்ளத்தால் நிகழ்வன மூன்றுமாகிய இப்பத்து மாகும். இதனைத் த ச தோ ஷ மென பௌத்தநூல் கூறும். நூற்பயனறிந்த நுண்ணுணர்வினர் இப்பத்தையும் விலக்குவர். விலக்காதவர் விலங்கும் பேயும் நாகருமாகிக் கலங்கிய உள்ளக் கவலையிற் றோன்றுவர். நல்வினை யென்பது மேற்கூறிய பத்தும் தம்மை யடையாதவாறு விலக்கி சீலந்தாங்கித் தானவழி நிற்றலாகும். அங்ஙன மிருப் போர் மேலாகக் கூறப்படும் தேவரும் மக்களும் பிரம்மருமாகிய நற்பிறவி யுற்று நல்வினைப்பயனை அடைந்திடுவர். எனவே, செய்கை யென்பது கரும விளக்க மாயிற்று.

## பஞ்சசீலம்.

மேற்கூறிய சீலமாவது காமம், கொலை, கள், பொய், களவு என்பன வாம். சீலத்தைத் தசசீல மெனப் பத்தாக்கியும், சில பௌத்த நூற்கள் கூறும். மேம்பாடடையக் கருதும் பௌத்த னொருவன் இவற்றினை முற் றத் துறத்தல் வேண்டுமென்ற பௌத்தர்களின் கொள்கை இந்நூலிலும் பல விடங்களிலும் கூறப்பட்டுள்ளன. (21: 57; 24: 137; 30; 1.)

> "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு
> முள்ளக்களவு மென்றுரவோர் துறந்தவை."

(24: 77)-8) என்றனர். மற்றும்,

> "கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
> மிக்க நல்லறம் விரும்பாது வாழு
> மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ." (6: 102-4)

எனக் கள்ளின் இழிவு தோன்றவும்; சாதுவன் நாகநாட்டினரின் தலைமக னுக்கு, "மயக்குமியல்புடைய கள்ளும், மன்னுயிரைக் கொல்லும் இழிய தொழி லையும், கயக்கறுமாக்கள் கடிந்தனர். மற்றுங்கேள்! பிறந்தவர் சாதலும், இறந் தவர் பிறத்தலும் உறங்கலும் விழித்தலும் போன்றது. இதுவே உண்மைப் பொருள். நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைவர். அல்லது செய்வோர் அருநா கடைவர். இதனை உணர்ந்த பெரியோர் மேற்கூறிய இரண்டுஞ் செய் யார்" (16: 84-90) எனக் கள்ளின் இழிவும் ஜீவகாருண்யத்தின் பெருமை யும் நன்னெறி நிற்றலின் உயர்வும் தோன்றக் கூறுமிடத்தும் இப் பஞ்சசீலங் களின் தன்மையும் அவைகளைக் கையாளவேண்டிய விதத்தினையும் ஏற்ற இடங்களில் இயைய அமைத்துக் கூறியுள்ளாரென்பது இங்கும் விளங்கும். மற்றும், "முதுநீருலகில், முடிபொருளுணர்ந்தோர் கடியப்படுவன ஐந்துள; அவை கள்ளும், கொலையும் காமமுமாகியவை. இவற்றை நீக்கினோர் நிறை தவமாக்களாவர். நீக்கோர் தாங்கா நரகந் தன்னிடை யுழப்போராவர்" எனச் சக்கரவாளக் கோட்டத்து முனிவரில் ஒருவர் அரசனுக்குக் கூறு மிடத்தில் வந்துள்ளதாலும் (22: 169-176); "மன்பேருலகத்து வாழ்வோர்க்கு, காமம்

கொலை, கள், பொய், களவென்னும் இவ்வைந்தும் துன்பம் தருவன; ஆக லின் இவை களைந்திடல் வேண்டும்" (காதை. 23) என மணிமேகலை அரசிக் குக் கூறுவதும் இராசமாதேவி, கள், பொய் முதலிய இவை கற்றறிந்தோர் துறந்தவை யெனக் கூறுவதும் (24: 77-8) காண்க.

## உணர்வு, அருவுரு, வாயில், ஊறு.

உணர்வெனப் படுவது "உறங்குவோருணர்விற், புரிவின்றாகிப் புலன் கொளாதது" என்றனர். அதாவது கருமம் யாதும் செய்திடாது நிற்சிந்தனை யாகக் கண்மூடித் துயிலுவானின் தன்மையைப் போன்றது. இதனை விஞ் ஞான மென்பர். அருவுரு வென்பது அவ்வுணர்வு சார்ந்த உயிரும் உடம்பு மாகும். "அவ்வுருத்தன்மை, யாக்கை" (30: 102-3) என்றனர் பின்னும், இதனை நாமரூப மென்பர். வாயிலென்பது உள்ள முறுவிக்க வுறுமிடங்க ளாகும். மனமும் ஞானேந்திரியங்களுமாகிய ஆறுமாம். இதனை ஷடாயதன மென்பர். ஊறென்பது உள்ளமும் வாயிலும் வேறுபுலன்களை மேவுதலென் பர். அதாவது இந்திரியங்கள் அவற்றின் செயல்களோடு சம்பந்தப்படுத லாகும். இதனை ஸ்பரிச மென்பர்.

## நுகர்வு, வேட்கை, பற்று, பவம், பிறப்பு.

நுகர் வென்பது ஐம்புலன்களை நுகர்தல். அதாவது சுகத்தையும், துக் கத்தையும் அனுபவித்தல். இதனை வேதனை யென்பர். வேட்கை யென்பது விரும்பி நுகர்ச்சியாராமை. அதாவது துன்பம் போக்கி இன்பத்தைப் பெற்றிடு மிச்சையைக் கொள்ளுதல். இதனை த்ருஷ்ணை யென்பர். பற் றென்பது ஒட்டி யிருக்கும் அறிவு; வேட்கையால் பிறந்திடுவது. இதனை உபாதான மென்பர். பவ மென்பது கருமத் தொகுதி. தருமுறை யிது வெனத் தாந்தாஞ் சார்தல். பிறப் பெனப்படுவது, 'அக் கருமப் பெற்றியால் உறப் புணருள்ளஞ் சார்பொடு கதிகளிற் காரண காரிய உருக்களில் தோன்ற' லென்றனர். அதாவது உள்ளம், தான் செய்த கருமங்களின் இயல்பொடு புணர்ந்து, பிறவிக ளெடுத்தல். இதனைத் தேற்ற மென்பர்.

## வினைப்பயன், இறப்பு.

வினைப் பயன்கள் பிணி, மூப்பு, சாக்காடு என்பன. பிணி யென்பது இயற்கையாக உள்ள தன்மைக்கு மாறாகப் போகுமிடத்து உடம்பு துன் புறுதல். மூப் பென்பது உடம்பு தளர்ச்சியுற்று நிலையாத தன்மையுறும் அந்தத்தின் அளவு. சாக்கா டென்பது அருவுருத் தன்மை. யாக்கை வீழ் கதிர் போன்று மறைந்திடு மியல்புடையது. விதித்த காலம் முடிந்த பின்னர், இம்மியும் தாமதியாது உயிர்களைக் கூற்றுவன் கொண்டு சென்று விடுவா னென்பது அந் நூற்களின் கருத்து. வந்த காலனை பொருள் கொடுத்துப் போற்றினும் போகான். நல்லன கூறி அவனை உயர்த்திப் பேசினும் போகான். கண்ணீர் வடித்து அழுவோரைக் கண்டு இரக்கங் கொள்ளான். சிறியோர் பெரியோ ரென்ற பேதமும் பாரான். தனது பணியைச் சற்றும் பின் வாங்காது செய்திடும் அவனுக்கே தருமனென்ற பெயர் பொருத்த முடையது. இவற்றினை விளக்கிக் கூறி, காலன் வரு முன்னே, ஆவி போக மேனி செயலற்றுக் கிடக்கக் கண் பஞ்சடையு முன்னே பட்டும் உண்மை யறியாத உற்றார் மேல் விழுந்து அழு முன்னே,

ஓரடியும் அப்பால் வைக்காத ஊரார் சுடு முன்னே, நல்லறம் விரும்பிச் செய்து வாழ் நாளைக் கழித்து, நல்ல பிறவியை யெய்திடு மாறு கூறுவான் வேண்டி,

"தவத் துறைமாக்கள் மிகப் பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்
முதியோ ரென்னு னிளையோ ரென்னுன்
கொடுந் தொழிலாளன் கொன்று" (6:97. 100) குவிப்பதன் முன்னர் நல்லன செய்திடல் வேண்டுமென வலி யுறுத்துதல் காண்க !! காலனும் காலம் பார்க்கும்" எனப் புற நானூறும் (41–1) உற்ற கால மறிந்து உயிரைத் தவறாது கொண்டு செல்லக் காலன் வருதலைக் கூறும், பழமொழி, (செ. 89) கலித் தொகை (105) முதலிய நூற்களும் இவ்வாறே மொழிந்திடும். உயிர் உடம்பினின்றும் நீங்கும் பொழுது கொள்ளும் நினைப்பின் பயனை மறு பிறப்பில் அவ்வுயிர் அடைய மென்பது தொன்னூல் துணி பாதலின் சாத்தனாரும் அங்ஙனமே கூறியுள்ளனர். (11:105–6-14: 101-4) ஆண்டாண்டுகளாக மாண்டாருக்கு அழுது கிடக்கினும் அவர்கள் மீண்டும் வாரார்கள் என்பதைக் கூறவும்: உடல் வேறு அதனை ஆட்டுவிக்கும் உயிர் வேறு என்றதின் உண்மை தோன்றவும், ஆசிரியர் மணிமேகலை இராசமா தேவியைப் புத்திர சோகத்தைப் பொருட்படுத்தா திருக்க வெனத் தேறுதல் கூறும் அமயத்து,

"யாங்கிருந் தழுதனை யிளங் கோன்றனக்கு
பூங்கொடி நல்லாய் பொருந்தாது செய்தனை
உடற் கழுதனையோ வுயிர்க் கழுதனையோ
.................................
உயிர்க்கழுதனையே லுயிர் புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற்றெரிந்துணர் வரிய
தவ் வுயிர்க் கன்பினையாயி னுய் தொடி
யெவ் வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டும்" (23. காதை)

எனக் கூறி நிற்கின்றனர். உடலினின்றும் உயிரை வேறுக்கிக் காட்டல் வேண்டியே, அரசியின் உபசார மொழிக்கு முனி அறவணர்,

"தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினே னாயினும் வீழ் கதிர் போன்றேன்" (24:101-2.)

எனத் தவயாக்கையை வேறுக்கி அதனுட் பொருந்திய "நான்" என்னும் பரமனைப் பிரித்துக் கூறினர். தமிழ் மக்களில் எம் மதத்தினரும் உடல் வேறு உயிர் வேறு எனக் கருதினர். இதனை மிகுந்த பழைமை வாய்ந்த தமிழ் நூலாகிய தொல் காப்பியமும்,

"காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்"

எனக் கூறுகின்றது. (தொடரும்.)

# ‘ போட்டுக்கோ-மூட்டாக்கு ’



(K. V. ராமகிருஷ்ணன்.)

“குழந்தை ஸாரதாவுக்கு வயது பதினான்கு ஆகிறது. நான் எல்லோரிடமும் பதினொன்று தான் எனச் சொல்லுகிறேன். யார் தான் நம்புவார்? இரண்டு வருஷங்களுக்கு முன்னதாகவே கலியாணம் ஆக வேண்டும். இவ் வருஷம் தை மாதம் எப்படியாவது கலியாணம் செய்தாக வேண்டும். ருது ஆய் விட்டால் நமக்கு அதைவிட வேறு அவமானம் வேண்டாம்; உங்களுக்குக் கொஞ்சமும் கவலையில்லையே” என்று மீனாக்ஷி தன் கணவன் சுந்தரமய்யரிடம் கூறினாள்.

சுந்தரமய்யா:—“நான் என்ன செய்யட்டும். என் பாகத்திற்கு குடும்ப சொத்திலிருந்து, வருஷத்துக்கு 75 ரூ. தான் வருகிறது. ஆபீஸ் சம்பளமோ 15 ரூ. தான். சம்பளம் உயரும் உயரும் என்று பார்த்தேன். நான் நாலு பேர் தலைமேல் உயரும்போது தான் என் சம்பளமும் உயரும் போலிருக்கிறது. இந் நிலைமையில் குட்டி கமலத்தை, ஒரு தகுந்த மாப்பிள்ளைக்குக் கொடுத்து விட்டேன். என்னிடமிருந்த ரூ. 200 வரதக்ஷிணையாகக் கொடுத்தேன். ரூ. 300 கடன் வாங்கி சீர் வகையறு செய்தேன். கடன்காரர் தொந்திரவு பொறுக்க முடியவில்லை. எந்தக் காலத்தில் திரும்பக் கொடுக்கப் போகிறேனே! விஷயம் இப்படியிருக்க, கவலை யில்லையே என்கிறாய். இந்தக் காலத்தில் வரதக்ஷிணை யில்லாத கலியாண மேது. அதற்குப் பணம் தான் நம்மிடம் கிடையாது. இப்போதைக்கு கிடைக்கப்போவதுமில்லை. ஸாரதா அழகுக் கென்ன குறைவா? பாட்டு வீணை போலிருக்கிறது. உலகத்தில் தருமம் இருந்தால், யாராவது வலுவில் வந்து அவளைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும். ஒருவரும் அப்படி வராவிட்டால், நமக்கு உதவியாகக் குழந்தை வீட்டிலேயே இருக்கட்டுமே.”

மீனாக்ஷி:—“வீட்டிலேயா! உலகம் என்ன சொல்லாது.”

சுந்:—உலகம் என்ன வேணுமானாலும் சொல்லட்டுமே.

மீ:—நமகது மாத்திரம் ஒரு புது வழக்கமா! நிச்சயமாய் ஜாதியை விட்டு விலக்குவார்கள்.

சு:—நான் என்ன செய்வது? பின் ஒரு வழிதான் உண்டு. ஒருகால் வீட்டிலும் ஒருகால் காட்டிலும் வைக்கும் எவனாவது ஒரு கிழவனுக்கு, ஸாரதாவை இரண்டாம் தாரமாகக் கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லை. அதற்கு நீ கட்டாயம் சம்மதிக்க மாட்டாய் என நினைக்கிறேன்.

மீனா:—நினைக்க மனம் புழுங்குகிறது. கடன் கிடைக்கா விட்டால் எல்லோருடைய நன்மைக்காக, அப்படிச் செய்வதைத் தவிர வேறு வழியில்லையே.

சுந்:—எனக்கு ஒரு பைசாக்கூட கடன் அகப்படாது. ஒரு வழி தான் இருக்கிறது. சாகப் போகும் ஏதாவது ஒரு கிழடுக்கோ, அல்லது குணமற்ற அநாதிக்கோ அல்லது புருஷத்தன்மையற்ற யாராவது ஒருவனுக்கோ கொடுத்துத் தொலைக்க வேண்டியது தான்.

மீனு:—மனம் அருவருக்கும்படி விஸ்தாரம் செய்யாதீர்கள். அது என் மனத்தைக் குழப்பி நடுங்கச் செய்கிறது. எப்படியானாலும் நம்முடைய கடமையை நான் செய்து தான் ஆக வேண்டும். குழந்தைக்குக் கலியாண மாகாததினால் வரும் அவமானத்திலிருந்தும், கஷ்டத்திலிருந்தும் ஊர்வாயில் விழாமல் தப்பிக்க வேண்டும்.

சுந்:—விஷயத்தை மறைப்பதில் பயனில்லை. கட்டாயம் நடந்தாக வேண்டிய விஷயங்களைப் பற்றி நினைத்து அழுவதில் பயனில்லை. நான் ஒரு மாத ரஜா எடுத்துக்கொண்டு முடிந்ததைச் செய்ய வேண்டியதுதான்.

மீனாக்ஷி:—அப்படியே செய்யுங்கள். ஈசன் வகுத்த வழி யாகட்டும்.

ஒரு மாதமும் சென்றது. சுந்தரமய்யர் உத்தியோகஸ்தரான சிவலோக நாதய்யருக்கு மாமனாராகும் பாக்கியத்தை அடைந்தார். சிவலோக நாதய்யருக்கு மாதம் 200 ரூ. சம்பளம். அநேகர் அவருக்கு மாமனாராக வரப் போட்டி போட்டதில் சுந்தரமய்யர்தான் வெற்றி பெற்றார். அதற்குக் காரணம் ஸாரதாவின் அழகிய சரீரக் கட்டும் முகவெட்டும் தான். சுந்தரமய்யர் மனைவியிடம் சந்தோஷச் செய்தியைக் கூறத் தொடங்கினார்.

சு:—அடியே, நல்ல அதிர்ஷ்டம் குட்டிக்கு, சோற்றுக்கும் துணிக்கும் குறைவில்லை. ஆபீஸர் பெண்டாட்டி. போன இடமெல்லாம் கௌரவம். கடவுள் கிருபையால் தான் விஷயம் அனுகூலமாய் முடிந்தது. நமக்குக் கொஞ்சம் பஞ்சமும் தீரும். வட்டி யில்லாமல் முட்டுத் தட்டுக்குப் பணம் கொடுத்து வாங்குவார்.

மீ:—(அவ்வளவு உற்சாக மில்லாதவளாய்) அவருக்கு வயது என்ன இருக்கும்?

சு:—ஐம்பது, ஆனால் நாற்பதுக்குத் தான் மதிப்பார்கள்.

மீ:—அவருக்கு 54 இருக்குமே. பல்லெல்லாம் விழுந்து 4, 5 வருஷ மாகிறதே. தலைதான் பருத்துக் கூடை போல் இருக்கிறது. புருவமயிர் கூட நரைத்து, கன்னங்கள் ஒட்டி, கண்கள் குழி விழுந்து போய் விட்டனவே. நாம் இருவரும் அவரை எத்தனையோ தடவை பார்த்திருக்க, ஏன் விஷயத்தை மறைக்கப் பார்க்கிறீர்கள்?

சு:—ஏன்! அவருக்கு எல்லாம் தான் ஆய் விட்டது. அவர் ஸாரதாவை வரதக்ஷிணை, சீதனம் ஒன்றும் இல்லாமல், அவர் சிலவிலேயே விவாகம் செய்துகொள்ளத் தயார். மேலும் அவர் சர்க்கார் உத்தியோகஸ்தர்.

மீ:—அவருக்கு இது மூன்றாவது கலியாண மல்லவா? முதல் தாரத்தினிடம் 4 குழந்தைகள், இரண்டாம் தாரத்தினிடம் 6 குழந்தைகள் உண்டே.

சு:—ஆமாம்; அவருக்கு இன்னும் 2 குழந்தைகள் கூட உண்டாகும். ஸாரதாவைக் கலியாணம் செய்வதால் 1 டஜன் கணக்காகட்டுமே.

மீ:-'ஐயோ, ஸாரதா, கெட்ட ஜாதகத்தில் பிறந்து விட்டாயே' (வெளிப்படையாக) அவர் ஏதாவது கம்பெனியில் லைப் இன்ஷூர் செய்திருக்கிறாரா?

சு:—அதை நான் எப்படிக் கேட்பது? நான் விசாரித்த வரையில் அப்படி யொன்றும் செய்திருப்பதாகத் தெரியவில்லை.

மீ: இனிமேல் லைப் இன்ஷூர் செய்யச் சொல்லுங்களேன்?

சு:—இந்த வயதில் எந்தக் கம்பெனி அவரைச் சேர்த்துக் கொள்ளும்.

மீ:—'ஆ! இவ்வளவு கேவலமான ஒருவருக்கா, குழந்தையைக் கொடுக்க வேண்டும். இதற்குப் பதில், கிணற்றில் கல்லைக் கட்டித் தாழ்த்தி விடலாமே' என்று கூறிக் கண்ணீர் விடுத்தாள்.

சு:—பெரு மூச்சு விட்டு "கல்யாணமும் வேண்டாம். கல்லெடுப்பும் வேண்டாம். கன்னியாகவே இருக்கட்டும். வருகிற தெல்லாம் வரட்டும்" என்று கோபத்துடனும் துக்கத்துடனும் கூறினார்.

இச் சம்பாஷணையைக் கேட்டிருந்த ஸாரதா, தன் விதியை நினைந்து விம்மி விம்மி யழுதாள். இதை மீனாக்ஷி பார்த்ததும், "நீயேன் இங்கு நிற்கிறாய், அடுப்பில் சாதம் பொங்கி வழியப் போகிறது" என்று கூறி அவளை சமையலறைக்கு அனுப்பி, கதவைச் சாத்திவிட்டு சற்றுத் தாழ்ந்த குரலில் பேசத் தொடங்கினார்கள்.

மீ:—குழந்தையுடைய, பின் வாழ்க்கையை நினைக்கும் பொழுது நெஞ்சு துடிக்கிறது. துக்கம் என்னை யறியாமல் பொங்குகிறது. இப்பாழும் ஊரிலில்லாமல், சென்னைப் பட்டணம் போன்ற இடங்களுக்காவது பிழைக்கப் போனோமா? மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவது போல், சின்னக் குழந்தையை சாகப் போகும் கிழவனுக்குக் கொடுப்பதைத் தடுப்பதற்கு நாட்டில் ஒருவரு மில்லையே.

சு:—நீ சொல்வது சரி, வேறு வழியொன்று மில்லையே. ஆனால் இம் மாதிரிக் கலியாணங்கள் எத்தனையோ நடக்கின்றன. எல்லாருடைய வாழ்வும் அவ்வளவு மோசமாய் விடுகிறதா?

மீ:— நன்றாய்ச் சொன்னீர்கள்! விதி விதி யென்று கிளி போன்ற பெண்களை கிழடுகளுக்குக் கொடுக்கிறார்கள். அப் பெண்கள் அவர்களுக்கு சம்பள மில்லா, பணிப் பெண்களாக காலம் கழிக்கிறார்கள். கிழடுகள் மாண்டபின் மறு விவாகம் செய்து கொண்டால் தான் என்ன, அவர்கள் வாழ்க்கை அவ்வளவு சந்தோஷமா யிருக்குமா?

சு:—சோற்றுக்குத் திண்டாடும் ஒரு அன்னக் காவடிக்கு விவாகம் செய்து கொடுப்பதை விட, தனவந்தரான ஒரு கிழவனுக்குக் கொடுத்தால் என்ன?

மீ:—அப்படியா நினைக்கிறீர்கள்? பணம் ஆற்று மடுவும் மேடும் போல தானே! பெண்களுக்கு கை நிறைந்த பொருளைவிட கண் நிறைந்த புருஷனே மேல். இவ்வளவு வயதாகிய உங்களுக்கு இது தெரியாதா?

சு:—நான் என்ன தான் செய்ய வேண்டு மென்கிறாய். ஸாரதா வீட்டிலேயே இருக்கட்டும்.

மீ:-நாமோ பரம ஏழைகள் ஊர் வழக்கத்துக்கு அடிமையாகி விட்டோம். புத்திக்குச் சரி யென்று பட்டதைச் செய்ய, தைரியமு மில்லை. ஏன், செய்ய ஆசை கூடத்தான் இல்லை.

சு:—என், நம்மை வழக்கத்து அடிமையாகப் பிணைத்திருக்கும் சங்கிலியை அறுத்து விடுவோமே.

மீ:—நம்மால் ஒரு நாளும் முடியாது. யானையாலும் கூடத்தான் அச் சங்கிலிகளை அறுக்க முடியாது. இதெல்லாம் வீண் எண்ணம்.

சு:—இந்த ஜாதியில் நான் என் பிறந்தேன். இந்த சமூகம் பெண்களைப் பலி வாங்கும் பூதமா" என்று கண்களைக் கசக்கினர்.

மீ:—பிறந்து விட்டோமே. இனி என் செய்வது, மேல் நடக்க வேண்டியதைக் கவனிப்போம். சிவலோக நாதய்யருக்குக் கடிதம் எழுதுங்கள்.

சு:—நானு, மாட்டேன் என்றேன். நீ தானே இவ்வளவு நேரம் வருந்தப்பட்டாய்.

மீ:—நான் பெண்ணல்லவா! இக் கலியாணத்தின் கொடுமைகளை சிந்திக்காமல் இருக்க முடியுமா! என் செய்வது, எல்லாம் விதிப்படி நடக்கும். போன மாதம் தான் 4 மாதக் குழந்தையைக் குழியில் போட்டேன். இப்பொழுது 14 வயதுப் பெண்ணுக்கு ஜீவசிரார்த்தம் செய்யச் சம்மதிக்கிறேன்.

சு:—சிவலோக நாதய்யருக்குக் கலியாணம் நிச்சயமாகி விட்டது' அழைப்புப் பத்திரிகைகள் அச்சடிக்கலா மென்று எழுதிவிடுகிறேன்.

மீ:—(ஈனக் குரலில்) "சரி; ஸாரதா, உன் தலை விதி யிப்படியாச்சே. உனக்கு அதிர்ஷ்டம் கொஞ்சமும் இல்லையே. வழக்கத்தின் அடிமைப் பாவியாகிய என் வயிற்றில் வந்து பிறந்து விட்டாயே" என்று கூறி முத்து முத்தாகக் கண்ணீர் விடுத்தாள்.

"அம்மா—ஏனம்மா அழுகிறாய்" என்று கூறிக் கொண்டே ஸாரதா சமைய லறையின் கதவைத் திறந்து வெளியே வந்து, தாயின் கண்ணைத் துடைத்தாள்.

மீ:—குழந்தாய் நீ இதெல்லாம் கதவிலுள்ள துவாரத்தின் வழியாய்க் கேட்டுக் கொண்டிருந்தாயா?-ஸாரதா வெட்கமும் துக்கமும் அடைந்தவளாய், மௌனமாய் தலை குனிந்தாள்.

மீ:—"நீதான் எல்லாம் கேட்டிருக்கிறாயே! நான் இனி உனக்கு என்ன சொல்லட்டும்" என்று கூறியவளாய் சமையலறைக்குள் நுழைந்தாள்.

இரண்டு வாரங்கள் கழிந்தன. சிவலோக நாதய்யருக்கும் ஸாரதாவுக்கும் விவாகம், அதிவிமரிசையாய், சுந்தரமய்யர் வீட்டிலேயே நடந்தேறியது தம்பதிகளுக்கு வந்த சன்மானங்களுக்கு அளவேயில்லை. சதுர், கச்சேரி, பாண்டு வாத்தியங்களுக்குக் கேட்பானேன். கூட்டம் எள்ளுப் போட்டால் கீழே விழாது. தம்பதிகளுக்குப் பெரியோர் ஆசீர்வாதங்களுக்குக் கணக்கில்லை. மீனாக்ஷியும் சுந்தரமய்யரும் கலியாண ஆடம்பரத்தினால், முக மலர்ச்சியுடனே காணப் பட்டார்கள். மீனாக்ஷி, மாப்பிள்ளை சிவலோக நாதய்யருக்கு வேளைக்கொரு அலங்காரம் செய்தாள். ஸாரதாவோ, ஜரிகைப் புடவை, தங்க நகை, வைர நகை முதலியவைகளால், அலங்கரிக்கப்பட்டு கலியாணப் பந்தலில் 4 நாளும் பார்ப்பவர் கண்ணைப் பறிக்கும் மின்னல் கொடிபோல் விளங்கினள். மீனாக்ஷி, குழந்தை ஸாரதாவை, தனியாகச் சந்தித்தபொழுது "குழந்தாய், உனக்குச் சந்தோஷம் தானே" என்று வினவினள்.

ஸார:—அம்மா, நீ அன்று அப்பாவிடம், கை நிறைந்த பொருளை விட

கண் நிறைந்த கணவனே மேல் என்று. அதை ஞாபகப் படுத்திக் கொள். அடிமைகளுக்குப் பிறந்தவள் அடிமைதானே."

மீனாக்ஷியின் முகம் மாறுபட்டது. துக்க மிஞ்சியவளாய், "ஈசா, நாங்கள் ஏன் பிறந்தோம்." ஸாரதா "பிறந்து விட்டோம், இனி யாரை நோவது." பிறகு இருவரும், மிகுந்த கஷ்டத்தோடு தங்கள் துக்கத்தை மறைத்தவர்களாய் வெளியே பிரிந்து சென்றார்கள்.

அப்பொழுது சுந்தரமய்யர் மனைவி யிடம் வந்து, "சரி—கலியாணம் ரொம்பப் பொருத்தமான தல்லவா?" என்று கூறி மனைவியின் முகத்தைப் பார்த்தார். அவள் விழிகளி னின்றும் அவள் உள்ளக் கொதிப்பை உணர்ந்தவராய், மௌனமாய்த் திரும்பி விட்டார்.

கலியாணம் கழிந்து 6 மாதங்களாயின. ஸாரதாவும் சிவலோகநாதய்யர் வீட்டிற்கு எஜமானியானாள். பத்து குழந்தைகளைப் பராமரிக்கும் பாக்கியம் அவளுக்கு ஏற்பட்டது. சில குழந்தைகள் அவளை விட அதிக வயதானவர்கள். ஸாரதா, தாய் தன்னிடம் கூறியதை விட, சிவலோகநாதய்யருடைய, தேக ஸ்திதி வர வர மோசமாய்க் கொண்டு வருவதை கவனிக்கலானாள். கலியாண சமயத்தில், குமரன் போல் அலங்கரித்திருந்த தன் கணவனது சுயரூபம் அவள் கண்ணில் ஊசி போல் குத்த ஆரம்பித்தது. சிவலோகநாதய்யரோ, தன் உயிரை மருந்து சாப்பிடுவதால் பிடித்து வைத்திருந்தார். நெடு நாட்களாய் அவரைத் தொந்திரவு செய்து வரும் க்ஷயம், வாதம், வயிற்று வலி இவைகளுக்காக அடிக்கடி மருந்து ஊற்றிக் கொடுப்பதில் ஸாரதா கண்ணும் கருத்துமாய் இருந்தாள். கண்ணில் மிகக் கனமான கண்ணாடி போட்டிருந்தும், பார்வை மிக மங்கலாகவே யிருந்தது. ஞாபக சக்தி மிகக் குறைந்தது. அடிக்கடி, சட்டை, பேனா, கம்பு, சாவி, இவைகளை வைத்த இடம் தெரியாமல் தவிப்பார். மனைவிக்கு இதைத் தேடிக் கொடுக்கத் தான் நேரம் இருக்கும். ஆனால் அவருக்குப் பல் வலி மாத்திரம் கிடையாது. பற்கள் முழுதும் விழுந்து பல வருஷங்களா கின்றன. அய்யருக்குத் திடீரென்று இருமல் வந்துவிடும். கபம் வெளியேறுவதற்குள் மிகுந்த அவஸ்தைப்படுவார். மனைவி வீட்டிற்கு வந்ததும் வீட்டி லிருந்த சமையல் காரியையும், வேலைக்காரியையும் விலக்கி விட்டார். ஸாரதா, கணவன் இருமும் பொழுதெல்லாம், பக்கத்தில் இருந்து அவர் துப்பும் கோழையை வெளியாக்கி சுத்தம் செய்வாள். சில நாட்களில், இரவில் ஐயர் விடாமல் இருமுவதனால், ஸாரதாவுக்குத் தூக்கமே கிடையாது. இவ்வளவு கஷ்டங்களையும், ஸாரதா, வியாதி கொண்ட கணவன், மேலும் கிழவர் என்று அனுதாபத்தினால், கடமையைச் செய்கிறோம் என்று பொறுத்து வந்தாள். அய்யரோ பெரிய லோபி. வீட்டு வேலை யாவற்றையும் மனைவியே செய்து வந்தாள். அய்யர் தந்திரமாக முகஸ்துதி செய்வதில் சமர்த்தர். ஒரு நாள் மனைவியைப் பார்த்து, "வேலைக்காரிக ளெல்லாம் கூலிக்கு மாரடிப்பவர் தானே. உன் சமையல் தான் எனக்கு வாய்க்கு ருசியா யிருக்கிறது. உன்னைப் போல் யார் பாத்திரம் பண்டங்களைச் சுத்தமாய் வைத்திருப்பார்கள்" என்று கூறுவார். பிறகு ஒருசமயம், "உன் கலியாணத்திற்கு ரொம்ப செலவு செய்துவிட்டேன். பிள்ளைகளும் சம்மதித்தார்கள். ஏனென்றால் நான் 3-வருஷத்துக்குள் குடும்பச்சிலவை கொஞ்சம் செட்டாக நடத்தி அந்தத் தொகையைச் சேர்ப்ப

தாகச் சொல்லியிருக்கிறேன். அந்தச் சனியன்கள் நான் ஒருவேளை இன்னும் 3-வருஷம்தான் ஜீவித்திருப்பேன் என்று நினைக்கிறார்கள் போலும்" என்று கூறினார். இதைக் கேட்ட ஸாரதா, "ஐயோ—இன்னும் இவருக்கு வாயுதா 2½வருஷம்தானு" ஆனால் அவரது தேகஸ்திதியோ அவ்வளவு காலம் அதிகம், என்று கூறுவது போல் தோன்றிற்று. என்ன செய்வாள் சிறுபெண். கலியாண சமயத்தில் போடப்பட்ட நகைகளெல்லாம் இரவல். அவைகள், அய்யருடைய பெண்கள். உறவினர் வசம் திரும்பக் கொடுக்கப் பட்டன. இப்பொழுது ஸாரதாவின் கழுத்தில் சுந்தரமய்யர் போட்டிருந்த நகையைத்தவிர வேறு கிடையாது. தாயின் தூண்டுகோலினால், ஸாரதா கணவனைப் பார்த்து, "எனக்கு என் நகையொன்றும் போடவில்லை. உமக்கு வாழ்க்கைப் பட்டதற்கு இது கூடவா இல்லாமல் போக வேண்டும்" என்று கேட்டாள். அய்யர் "அடி, பயித்தியக்காரப் பெண்ணே, யாரோ அழகுக்கழகு செய்வார்? அவலக்ஷணங்களுக் கல்லவா நகை." என்றார். ஸாரதா "அப்படியானால் கலியாணத்தன்று என் அவ்வளவு நகையை என் கழுத்தில் சுமத்தினீர்கள்." அய்யர், "அதுஊருக்காக, ஐயோ, இருமல்;" இரும ஆரம்பித்து விட்டார். உடனே ஸாரதா, இவர் தந்திரமாக இரும ஆரம்பிக்கிறார் என நினைத்துவிட்டு வேலையைப் பார்க்க ஆரம்பித்து விட்டாள்.

ஒருநாள் சிவலோகநாதய்யர் தன்மனைவியுடன் வெகு தூரத்திலுள்ள ஓர் ஊருக்கு ரயிலில் பிரயாணமானார். அவ்வூரை அடைந்ததும் அய்யர் வண்டியைவிட்டு இறங்கியும் ஸாரதாவின் கையைப் பிடித்துக்கொண்டு பிளாட்பாரத்தில் உல்லாசமாய் நடந்தார். அங்கிருந்த ஸ்டேஷன் மாஸ்டர் சிவலோகநாதய்யருக்குக் கொஞ்சம் அறிமுக மானவர். அவர் அய்யரைப் பார்த்தும், "ஸார், சௌக்கியம்தானு—இது எது குழந்தை. ரொம்ப அழகாயிருக்கிறுளே. நல்ல கூர்மையான புத்தியுடையவள் போல் தோன்றுகிறது. உம்முடைய பேத்தியோ?" என்று கேட்டார். இதற்கு பதிலாக, ஸ்டேஷன் மாஸ்டர் வியப்படையும்படி, அய்யர் முகத்தைச் சுளித்துக்கொண்டு, பதில் ஒன்றும் சொல்லாமல், ஸாரதாவையும் இழுத்துக்கொண்டு வேகமாய் நடந்து விட்டார். இச் சம்பவத்திற்குப் பிறகு அய்யர், மனைவியை ஓரிடத்திற்கும் கூட்டிக் கொண்டு போவதில்லை.

பெயரளவில், புருஷன் மனைவி என்றிருந்தாலும் கூட சில சமயங்களில் அவர்களுக்குள்ளும் லீலைகள் நடப்பது வழக்க மல்லவா? சிவலோகநாதய்யர், கிழவரானதால், தன் மனைவியிடம் வலுவில் சென்று ஒரு முத்தம் கொடுக்கவோ, ஆலிங்கனம் செய்யவோ, சக்தி யற்றவராய் விட்டார். ஸாரதாவுக்கு எப்படித் தான் அந்தப் பாழும் கிழடை முத்தம் கொடுக்க வேண்டுமென்று தோன்றும்? அய்யர் தனக்கு ஆசை தோன்றும் போதெல்லாம், 'அடி ஸாரதா, ஒரு முத்தம் கொடேன்' என்று வேண்டுவார். அவளும், அது தன்னுடைய கடமை யென நினைத்துச் செய்து வந்தாள். ஒரு தடவை ஸாரதா, அவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்த பொழுது, தடுக்க முடியாமல், இயற்கையாக உண்டான மோஹத்தினால் அய்யரை இறுகத் தழுவினாள். உடனே அய்யர், "ஐயோ, தூரப் போ, என்னை நெறித்துக் கொல்லப் பார்க்கிறாயா; என் விலா எலும்புகள் நொறுங்கி விட்டனவே." என்று கடிந்து பேசி விட்டார். ஸாரதா, துக்கத்தினாலும் வெட்கத்தினாலும் கோபத்தினாலும் மன முடைந்தவளாய், 'இந்த நிமிஷமே என் உயிர் போக

வில்லையே,' என்று ஏங்கினவளாய் அய்யரின் விலா எலும்புகளை அமுக்கிக் கொண்டிருந்தாள்.

சிவலோக நாதய்யருக்கு 55 வயதானது. சர்க்கார், பென்ஷன் கொடுத்து விட்டார்கள். இன்னும் கொஞ்ச காலம் வேலை பார்ப்பதற்காகச் செய்த முயற்சிகள் எல்லாம் வீணாயின. ஆதலால் அய்யருக்கு முன்னைவிடக் கோபம் அடிக்கடி வர ஆரம்பித்தது. இப்பொழுது பகலிலும் அய்யர், மனைவிக்குச் சரியான வேலை கொடுக்க ஆரம்பித்து விட்டார்.

ஒரு நாள் ஸாரதா, தன் வீட்டுத் திண்ணையில், ஒரு மாதோடு பேசிக் கொண்டிருந்தாள். அவள் பெயர் விஜயாள். விஜயாள் பட்டணத்திலிருந்து, தன் மாமாவின் கலியாணத்திற்காக அவ்வூருக்கு வந்து ஒரு மாத மாகிறது. அவள் ஸாரதாவுக்குப் புதிய சிநேகம்.

விஜயாள்:—"ஆயிரம் வியாதி; ஆக்கம் ஒன்றுமில்லை. இந்தக் கிழவனை மணந்து நீ என்ன சுகமடைந்தாய்?"

ஸார:—நமக்கு என்ன சுதந்திரம் இருக்கிறது. பெற்றோர்கள் பார்த்து நம்மை எவனிடமாவது தள்ளி விடுகிறார்கள். கலியாணம் ஒரு லாட்டரி. அவரவர் அதிர்ஷ்டம் போல் இருக்கும். என்றாலும் ருதுவாகு முன்னால் கலியாணம் செய்யா விட்டால் அவமானம் வந்து விடும் என்று நினைத்து இப்படிபட்ட அவமானத்திற்குப் பெண்களை ஆளாக்குகிறார்களே. இதை விடக் கொடுமை வேறில்லை."

விஜ:—அப்படித் தான் மூட்டாள் தனமாகச் செய்கிறார்கள். அதை நாம் தைரியமாக எதிர்த்துப் போராட வேண்டும்."—அதற்குள்ளாக ஸாரதாவை, அய்யர் கூட்பிட்டு விட்டார். உடனே ஸாரதா, விஜயாளிடம் உத்தரவு பெற்று உள்ளே புறப்பட்டாள்.

விஜ:—என்? உடனே போக வேண்டுமோ?

ஸார:—அது தான் வழக்கம். அதை எப்படி மீறுவேன்!

2 மாதங்கள் சென்றன. சிவலோக நாதய்யருக்கு வியாதி முற்றி விட்டதால் சிவலோகப் பிராப்தியானார். ஸாரதாவுக்கு உயில் ஒன்றும் எழுதி வைக்கவில்லை. அவர் பிள்ளைகள் ஸாரதாவுக்குச் சோறும் துணியும் கொடுப்பதாயும், தங்கள் வீட்டிலேயே இருந்து சகல வேலைகளையும் பார்க்க வேண்டுமென்றும், அப்படிச் செய்ய வேண்டுமானால் அவள் மொட்டையடித்து, வெள்ளைப் புடவை கட்ட வேண்டுமென்றும் சொன்னார்கள். ஸாரதாவின் மனம் அதற்கு இணங்கவில்லை.

தோழி விஜயாள் "ஸாரதா, நான் சொல்வதைக் கேள், என்னுடன் சென்னைப் பட்டணத்துக்கு வா. விதவா விவாக சபையாரை நாடி உனக்கு மணம் செய்து வைக்கிறேன். உன் அழகுக்கு யாரும் ஆசைப் படுவார்கள்."

ஸாரதா:—"எங்கள் குடும்பத்தில் அப்படி இதுவரை ஒருவரும் செய்ததில்லையே. மேலும் எங்கள் ஊரிலேயே அந்த வழக்கம் இல்லை. அவ்வாறிருக்க நான் எப்படித் துணிவேன்" என்று மனம் பதறினாள்.

விஜ:—வழக்கமாவது, மண்ணாவது. நம் தேசத்துப் பெண்கள் கழுத்துகளில் இவ் வழக்கம் என்ற உருளைக்கல் தொங்கிக் கொண்டு, தலை

# கல்வி சீர்திருத்தம்

(V. சங்கர ஐயர்.)

தற்கால கல்வி முறையானது ஊக்க மளிக்கத்தக்கதாக இல்லாமையால்பாடத்திட்டம், கல்வி கற்பிக்கும் முறை முதலியவைகளில் மாறுதல் அவசியம் ஏற்படவேண்டும், இவ் விஷயம் இப்பொழுது அதிக சஞ்சலத்தை உண்டாக்கி யிருக்கிறது. தற்சமயம் S. S. L. C. பரீக்ஷை தேறின மாணுக்கர்களுடைய கல்வித்திறமை பல துறைகளுக்கும் கொஞ்சமும் லாயக்கில்லாததாக இருக்கிறது. இது விஷயத்தைக் குறித்து மேதாவிகள் வெகு காலமாக ஆலோசித்து வருகின்றார்கள். நாட்டுப்புறத்து ஜனங்களும் இவ் விஷயத்தைக் குறித்து அதிகமாகக் கவலைகொள்ள ஆரம்பித்து விட்டனர். ஏனென்றால் படிப்பு கற்காத நாட்டுப்புறத்து ஜனங்களும் தங்கள் மக்கள் படிப்பு கற்று மேதாவிகள் ஆகவேண்டு மென்ற மோஹத்தால் தங்களுடைய பூர்வீக சொத்துகளை யெல்லாம் விற்று கல்வி கற்பதற்காக பாடசாலைகளுக்கு அனுப்புகிறார்கள். தற்கால கல்விமுறை பிரயோஜ மில்லாதது என்றும், சரியான முறையில்லை என்றும், தங்கள் மக்களின் பிற்கால வாழ்க்கைக்கு உதவி புரியாதது என்றும் தெரிந்துகொண்டு மிகவும் வருந்துகிறார்கள். சர்வகலாசாலை அதிகாரிகளும் பரீக்ஷாதிகாரிகளும் கூட S. S. L. C. மாணுக்கர்களுடைய கல்வித்திறமை மிகவும் குறைவாக இருக்கிறது என்று அடிக்கடி குறைகூறி வருகிறார்கள்.

இப்படி எங்கே பார்த்தாலும் கல்வி விஷயமான குறைகளே நிறைந்து காணப்படுவதால் கல்வி இலாகா அதிகாரிகளும் ஸெக்கண்டரி பாடசாலையிலுள்ள கல்வி முறையை புதுப்பித்து நவீன முறையில் குறைகளே இல்லாமல் செய்யப் பாடுபட தொடங்கி விட்டனர். ஆகையால் கல்வி இலாகா மேலதி

---

நிமிர முடியாமல் தாழ்த்துகின்றது. அந்தக் கல்லை உடைத் தெறிந்தால் பின் சுதந்திரமாய் இருக்கலாம்.

ஸாரா:—(அழுது கொண்டே) எனக்கு அப்படித் தைரியம் வரவில்லையே. நான் வெகு நாட்களாய் அடிமைப் பட்டதனுல், சுதந்திரமாய் இருப்பதற்குச் சக்தி யற்றவளாய், சுதந்திரத்திற்கான ஆசையு மற்றவளாய் விட்டேனே. தயவு செய்து நீங்கள் போங்கள். நான் மொட்டை..................ப்பாவியாகவே என் வாழ்க்கையைத் தொலைக்கிறேன்," என்று சுருண்டு அடர்ந்த தலை மயிர் அலங் கோலமாய்ச் சிதறிய மேகங்கள் போல், அவளது பிறை நுதலை இடையிடையே மறைக்க, கரு விழிகளினின்றும் வடியும் கண்ணீர், கூந்தலையும் புடவையையும் நனைக்கக், கதறி யழுது மெலிந்தாள். அவ்வாறே முட்டாக்கும் போட்டுக் கொண்டாள்.

காரி சமீபத்தில் கல்வி சீர்திருத்தத்திற்காக சில கேள்விகளை எல்லாம் ஆங்கில பாடசாலைகளுக்கும் அனுப்பி யிருக்கிறார். அவைகளுக்கு பதில் கிடைத்ததும் சில மாறுதல்கள் செய்ய அதிகாரிகள் தீர்மானித் திருக்கிறார்கள்.

மஹாமேதாவிகளான தலைமை உபாத்தியாயர்கள் கூட பிள்ளைகளைப் பாடசாலைகளில் சேர்ப்பதிலும், மேல் வகுப்புக்கு மாற்றுவதிலும் தவறி விடுகிறார்கள். மாணாக்கர்களின் கல்வித் திறமைக் குறைவுக்கு முக்கிய மூல காரணம் என்னவென்று ஆராயுங்கால், மாணாக்கர்களை இவ்வாறு பாடசாலைகளுக்கு பிடித்து இழுத்துக் கொள்வதே யாகும்.

வகுப்புகளில் மாணாக்கர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டும் என்ற பேராசையால் பாடசாலையில் சேர்ப்பதற்கும், மேல் வகுப்புகளுக்கு மாற்றுவதற்கும் ஏற்பட்டிருக்கும் விதிகளையும் நிராகரிக்கிறார்கள். அதிக பெருமை வாய்ந்த கல்வியிலாகா அங்கத்தினர்களாகிய பாடசாலை அதிகாரிகளால் கையாளப்படும் இத் தன்மைடான கேவலத்தொழில் (தகுதியற்ற மாணாக்கர்களைத் தகுதி யென்று வகுப்புகளில் சேர்ப்பதும், மேல் வகுப்புகளுக்கு மாற்றுவதும்) ஒருகாலும் மன்னிக்கத் தக்கதன்று. ஒவ்வொரு வகுப்புகளிலும் ஏராளமான மாணாக்கர்க ளிருக்கின்றனர். ஆனால் இவர்களில் 90% இரண்டு அல்லது மூன்று வகுப்புகளுக்கு கீழ் வகுப்புகளுக்குக் கூட லாயக்கில்லாதவர்களே. எப்படி ஒரு வகுப்பானது நல்ல உபாத்தியாயர் இல்லாவிட்டால் முன்னேற்ற மடையாதோ அப்படியே ஒரு உபாத்தியாயரும் நல்ல பிள்ளைகளில்லாவிட்டால் முன்னேற்ற மடைய முடியாது. தகுதியான பிள்ளைகளைச் சேர்த்து ஏன் கற்பிக்கக்கூடாது என்று நீங்கள் கேட்கலாம். இதற்குப் பதில் கூறுவது மிகவும் சுலபம். மாணாக்கர்களை பரீட்சித்து பாடசாலை அதிகாரிகளால் சரியான வகுப்புகளில் சேர்க்கவோ அல்லது மேல்வகுப்புகளுக்கு மாற்றவோ முடியாது. ஏனென்றால் உபாத்தியாயர் ஒரே ஊரிலேயே இருந்து காலக்ஷேபம் செய்யவேண்டி யிருப்பதால் அவ்வூராருடைய தயவு அவர்களுக்கு வேண்டி யிருக்கிறது. அவ்வூராருடைய அபிப்பிராயத்துக்கு மாறாகச் செய்ய முடியவில்லை. S. S. L. C. பரீக்ஷைக்கு மாணாக்கர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் பொறுப்பு தலைமை உபாத்தியாயருடையதே. ஆயினும் பாடசாலை நிர்வாகி (பிரைவெட், அல்லது ஜில்லாபோர்டு)கள் தலைமை உபாத்தியாயர்களைக் கட்டாயப்படுத்தி ஷை பரீக்ஷைக்கு பணம் கட்டச் செய்திருக்கும் சந்தர்ப்பங்களையும் நான் நன்கு அறிவேன்.

பாடசாலையின் வெகுகால வாழ்க்கைக்காக மாணாக்கர்களைக் கண்மூடித்தனமாகச் சேர்ப்பதையும், மேல் வகுப்புக்கு மாற்றுவதையும் நாமறிவோம். ஒருகாலும் சரியாக இருக்க முடியாத ஒருவிதமான பரீக்ஷை யென்ற ஒரு பித்தலாட்டத்தைக்கொண்டு பையன்களை நான்காவது பாரம் முடிய சேர்க்கலாம் என்று ஒரு விதி யிருப்பதால், பிரைவேட் படிப்பி லிருந்தும், எலிமெண்டரி பாடசாலைகளி லிருந்தும் லாயக்கில்லாத மாணாக்கர்களைக் கண்மூடித்தனமாக நான்காவது பாரம் முடிய சேர்த்து விடுகிறார்கள். இந்த மாணாக்கர்கள் ஆறாவது பாரத்தையும் உபாத்தியாயர்கள் தயவினாலேயே அடைந்து விடுகிறார்கள். ஆங்கிலத்தில் 10%-ம் அதற்கும் குறைவாக மற்றப் பாடங்களிலும் மார்க்கு வாங்கிக்கொண்டு அந்த வகுப்பைவிட்டு கரையேற

வழி தெரியாமல் பரிதபிக்கின்றார்கள். அஸ்திவார பலமில்லாத கட்டடம் இடிந்துதான் விழு மென்பதில் சந்தேகமுண்டோ?

ஒரு பையன் மூன்றாவதுபாரம் தேறினதாகவுள்ள ஸர்ட்டிபிக்கேட்டுடன் வந்தான். அவன், 'உன் பெயரென்ன? எந்த வகுப்பு சென்ற வருஷம் படித்தாய்?' என்ற சாதாரணக் கேள்விகள் கேட்கப்பட்டான். அவன் சொன்ன விடையிலிருந்து அவன் ஐந்தாவது வகுப்புக்குத்தான் லாயக்கென்றும், ஆனால் மூன்றாவது பாரம் தேறின ஸர்ட்டிபிக்கெட் கொண்டுவந்திருப்பதால் சென்னை கல்வி இலாகா சட்டம் 37-படி ஜில்லாக் கல்வி யதிகாரியின் உத்தரவு பெறாமல் நான்காவது வகுப்பைத் தவிர வேறு வகுப்புகளில் சேர்க்க முடியாது என்றும், தீர்மானித்து அவன் ஒரு கேள்விப்பத்திரம் கொடுக்கப்பட்டான். அவனும் ஏதோ எழுதினான் என்றுதான் கூற முடியும். ஜில்லாக்கல்வி யதிகாரியின் உத்தரவின் பேரில் மூன்றாவது பாரத்தில்தான் சேர்க்க முடியும் என்று கூற பையன் மெதுவாக நழுவி விட்டான். எங்கே அவன் பிறகு சென்றான் என்பது இன்னும் அறிய முடியவில்லை. அந்த தகுதியற்ற மாணாக்கன் நிச்சயமாக வேறு ஏதாவது ஒரு பாடசாலையில் சேரக்கூடும். அங்கே எப்படியாவது ஆறாவது பாரம் சென்று S. S. L. C. பரீக்ஷையிலும் உட்கார்ந்து எழுதி விடுவான். அடுத்த வகுப்பைத் தாண்ட பல வருஷங்கள் அவனும் பாடுபடுவான், ஆனால் மூன்று தடவைக்குமேல் அப் பரீக்ஷைக்கு உட்கார்ந்து எழுத விதி இடம் கொடுக்கவில்லையே! என்ன செய்வான் பாவம்!

இந்திய சர்க்கார் கல்வியிலாகா கமிஷனர் ஸர் ஜார்ஜ் ஆண்டர்ஸன் தயாரித்த 'பஞ்ச ஸம்வத்ஸர வித்யா பரிசீலனை' (Quinquennial review) யில் சென்னை மாகாணத்து செக்கண்டரிக் கல்வி என்ற தலையங்கத்தின் கீழ் அடியிற் குறிப்பிட்டபடி எழுதியிருக்கிறார்:—"பாடசாலை மாணாக்கர்களின் கல்வித் திறமையின்மைக்கும், ஒரே வகுப்பில் படிக்கும் பல மாணாக்கர்களுடைய கல்வித்திறமை பலவிதமாக யிருப்பதற்கும் முக்கிய காரணம், மாணாக்கர்களுடைய அபிவிருத்திக்குத் தகுந்தபடி நான்காவது பாரம் முடியவுள்ள எந்த பாரத்திலும், மாணாக்கர்களை தலைமை உபாத்தியாயர் சேர்த்துக்கொள்ளலாம் என்று அனுவாதம் கொடுத்த சட்டமேயாகும். ஆகையால் மானேஜர்களும் தலைமை உபாத்தியாயர்களும் பாடசாலையின் வகுப்புகளில் பல தகுதியற்ற மாணாக்கர்களைச் சேர்த்து வகுப்பில் மாணாக்கர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தவும், அதனால் அதிகப் பணம் வசூலிக்கவும் விரும்புகிறார்கள்,

எட்டாவது வகுப்பு வரையிலுமுள்ள எலிமெண்டரி பாடசாலைகளிலிருந்தும் உண்மையான சிரமம் ஏற்படுகிறது என்பது நன்றாக அறிந்த விஷயமே யாகும். அப் பாடசாலைகளில் சாதாரணமாக செக்கண்டரி கிரேட் டிரெயினிங் ஆன உபாத்தியாயர்களும், அதற்கும் குறைவான தேர்ச்சி யுள்ளவர்களும் நியமிக்கப்படுகிறார்கள். அங்கு உபகரணங்களும் மிகக் குறைவே. அப் பாடசாலைகளில் எட்டாவது வகுப்பில் தேறினவர்கள் ஒருகாலும் நான்காவது பாரத்துக்கோ அல்லது மூன்றாவது பாரத்துக்கோ கூட லாயக்கில்லாதவர்கள் என்று நிச்சயமாகக் கூற முடியும். இவர்களுக்கென்று ஏற்பட்டுள்ள பரீக்ஷையோ தனிப்பட்ட ஓரிடத்தில் தனிமையான ஒரு அதிகாரியால் பாடசாலையிலேயே நடத்தப்படுகிறது. அப் பரீக்ஷை எத்

தன்மை மதிப்புள்ளது என்றும், அப் பரீக்ஷாப் பத்திரம் எப்படிப்பட்டது என்ற விஷயம் நான் எழுதாமலே தெரிந்துகொள்ள முடியும். இவ்வித பரீக்ஷாபத்திரமுடைய மாணுக்கர்களையும், ஒரு பாடசாலையிலும் படிக்காத (private study) மாணுக்கர்களையும், பிரைவேட் பரீக்ஷை யென்ற ஒரு வியாஜத்தால் பரிசோதனை செய்து நான்காவது பாரம் முடியவுள்ள வகுப்புகளில் சேர்ந்து பாடசாலையின் பிள்ளைகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்துகிருர்கள். இம்மாணுக்கர்களை மறுபடியும் பரிசோதனை செய்தால் அவர்களைச் சேர்த்திருக்கும் வகுப்புகளுக்கு இரண்டு அல்லது மூன்று வகுப்புகளுக்குக் கீழ் வகுப்புகளுக்கும் கூட லாயக்கில்லை என்று உறுதியாகக் கூற முடியும்.

கமிஷனர் பின்னும் கூறுவதாவது:—"மிடில் ஸ்கூல் படிப்பு முடிந்ததும், கவர்ண்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட ஒரு பொதுப் பரீக்ஷை யில்லாமல் தலைமை உபாத்தியாயர்கள் இஷ்டப்படி கண்மூடித்தனமாக நான்காவது பாரத்திலும் மாணுக்கர்களைச் சேர்க்கப்படுவதேயாகும். மாணுக்கர்களின் இவ்விதமான கல்வித் திறமையின்மைக்குக் காரணம்" கமிஷனர் கூறி யிருப்பது உண்மையே! மிடில்ஸ்கூல் பரீக்ஷை ஒன்று மிடில்ஸ்கூல் படிப்பு முடிந்ததும் சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டால் ஹைஸ்கூல் வகுப்புகளுக்கும், ஹையர் எலிமெண்டரி கிரேட் டிரெயினிங் பாடசாலைகளுக்கும், தகுதியான மாணுக்கர்கள் கிடைக்கும். S. S. L. C. மாணுக்கர்கள் தகுதியற்றவர்கள் என்று வெகுகாலமாக எல்லோரும் கூறி வருகின்ற வதந்தியும் அப்பொழுது தான் பொய்யாகிவிடும். பதர்களும் அங்கேயே தங்கி விடும்.

இவ்விதம் தகுதியற்ற மாணுக்கர்களை தகுதி யுடையவர்கள் என்று பாடசாலைகளில் சேர்ப்பதற்கும், மேல் வகுப்புகளுக்கு மாற்றுவதற்கும் தாம் தலைமை உபாத்தியாயர்களைப் பழிப்பது அழகல்ல. ஏனென்ருல் மாணுக்கர்களின் எண்ணிக்கையாலும், பண வசூலாலும், அவர்களுடைய மானேஜ்மெண்டாரை திருப்திப்படும்படி செய்யவேண்டி யிருக்கிறது. அவ்வூரார்களிடத்தில் நன்மதிப்பும் (Cheap popularity) பெறவேண்டி யிருக்கிறது. பண ஆசையுள்ள மானேஜ்மெண்டாருடையவும் பாடசாலைகளின் முன்னேற்ற விஷயங்களைக் குறித்து நன்கு ஆராய்ந்து தீர்மானிக்கச் சக்தியில்லாத ஊரார்களுடையவும் தயவினுலேயே உத்தியோகம் வகிக்கவேண்டியிருப்பதால் தலைமை உபாத்தியாயர்கள் அப்படித்தானிருக்க வேண்டி யிருக்கிறது.

இவ்விதமான ஸகல குறைகளையும் நிவர்த்திசெய்ய ஒரே ஒரு வழிதானிருக்கிறது. அதாவது 1910-வது வருஷத்திற்கு முன்னிருந்தப் பிரகாரம் மூன்ருவது பாரத்தின் முடிவில் மிடில் ஸ்கூல் பரீக்ஷையும் ஐந்தாவது வகுப்பின் முடிவில் பிரைமெரி பரீக்ஷையும் ஏற்படுத்துவதே யாகும். பரீக்ஷைகளே கூடாது என்று ஒரு கூட்டத்தார் இக்காலத்தில் கூக்குரலிடுகிருர்கள். ஆனுலும் பிள்ளைகளை பரீக்ஷை செய்து வடிகட்டி தகுதியில்லாதவர்களை ஒதுக்கிவிடவும், தகுதியில்லாத மாணுக்கர்கள் தகுதி யுடையவர்களென்று பெற்ருேர்களை ஏமாற்றி அவர்களுடைய பூர்வீக சொத்துக்களை யெல்லாம் விற்று மாணுக்கர்களுக்காக வீண் விரயம் செய்யாமலிருக்கவும் இவ்விதப் பொது பரீக்ஷைகள் அவசியமேயாகும். பிரைமரி பரீக்ஷையில் தேறினவர்களை மாத்திரம் முதல் பாரத்தில் சேர்ப்பதால் மிடில் ஸ்கூல் வகுப்புகளுக்கும், மிடில்

ஸ்கூல் பரீக்ஷையில் தேறினவர்களை மாத்திரம் நான்காவது பாரத்தில் சேர்ப்பதால் ஹைஸ்கூல் வகுப்புகளுக்கும், தகுதியான மாணுக்கர்கள் அகப்படுவார்கள் என்பதில் சந்தேகமேயில்லை.

"செக்கண்டரி படிப்பை முன்னேற்ற மடையும்படி செய்ய ஒரு முதன்மையான வழி, முன்னிருந்த மிடில் ஸ்கூல் பரீக்ஷைக்கு புத்துயிர் கொடுப்பதே யாகும்" என்று சென்ற வருஷம் கூடின இண்டர் யூனிவெர்ஸிட்டி கான்பெரன்ஸிலும் தீர்மானித் திருக்கிறார்கள். இது விஷயமாக பாலக்காட்டு செட்டிவ் ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் கனம். பரமேசுவரய்யர் அவர்கள் 14-12-1929-ல் இப் பரீக்ஷைகளுக்கு புத்துயிர் கொடுத்தாலே கல்வி யபிவிருத்தியடையும் என்று கூறி ஒரு சுற்றறிக்கை பல தலைமை உபாத்தியாயர்களுக்கும் அனுப்பினார். அனேகர் இதை ஆமோதித்தும் எழுதியுள்ளார்கள். இது விஷயமாக சென்னை கல்வி விமர்சனம் என்ற (The Madras Educational Review) பத்திரிகையில் 1934-வது வருஷம் அக்டோபர் மாதத்துப் பத்திரிகையில் 662 முதல் 664வரையிலுமுள்ள பக்கங்களிலும் 1935-வது வருஷம் டிசெம்பர் மாதத்துப் பத்திரிகையில் 827 முதல் 830 வரையிலுமுள்ள பக்கங்களிலும், ஆங்கிலத்திலும், 1931 வது வருஷம் ஜூலைமாதம் 29-தேதி ஆனந்தபோதினி வாரப் பத்திரிகையிலும், ஆனந்தபோதினி மாதப் பத்திரிகையில் 1934ளு அக்டோபர் மாதம் 286 முதல் 288 முடிய உள்ள பக்கங்களிலும், 1936-வது வருஷம் மார்ச் மாதம் 669 முதல் 673 முடிவுள்ள பக்கங்களிலும், எழுதி யிருப்பவைகளை அன்பர்கள் கண்ணுறுவார்களாக!

முடிவாகக் கூறுவது என்னவென்றால்,

(1) பிரைமெரி படிப்பு ஐந்தாவது வகுப்போடுகூட முடியவேண்டும்.

(2) அவ்வகுப்பில் அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட பரீக்ஷை ஒன்று ஒவ்வொரு ஜில்லாவிலும் ஏற்படுத்த வேண்டும்.

(3) அதுபோலவே மூன்றாவது பார முடிவில் ஒரு பரீக்ஷை ஒரே தாய்பாஷை வழங்கும் பாகத்துக்கெல்லாம் அரசாங்கத்தார் ஏற்படுத்த வேண்டும். பிரைமெரி ஸர்டிபிகேட் பெற்றவர்களை மாத்திரமே முதல்பாரத்தில் சேர்க்க வேண்டும்.

(4) நான்காவது பாரத்திலும், ஹையர்கிரேட் டிரெயினிங் பாடசாலைகளிலும் இந்த மிடில் ஸ்கூல் ஸர்ட்டிபிக்கெட்டு பெற்றவர்களை மாத்திரம் தான் சேர்க்கவேண்டும்.

(5) இப்பொழு திருப்பதுபோல் S. S. L. C. பரீக்ஷை ஆறாவது பார முடிவில் இருக்கவேண்டும்.

(6) லோயர் டிரெயினிங் பாடசாலைகளே நமது மாகாணத்திலிருக்கக் கூடாது.

(7) இப் பரீக்ஷைகளுக்கு தேறுவதற்காக ஏற்படுத்தப்படும் சட்டம் (Eligibility rules) குறைந்தபக்ஷம் 12 வருஷங்களுக்குள் எக்காரணத்தை யிட்டும் மாற்றக்கூடாது. மாணுக்கர்களுக்குக் கொடுக்கப்படும் மார்க்கை

மாடரேஷன் போர்டார் முதலிய மத்திய மார்க்கத் திருத்தல்களுக்கு சட்டம் இடம் கொடுக்கக்கூடாது.

(8) திருவாங்கூர் முதலிய இடங்களில் இப்பொழுது இருப்பது போல, ஐச்சிக பாடங்களை (Optional subjects) S. S. L. C. பரீக்ஷை வரையிலும் அவசியமில்லையென்று தீர்மானிக்க வேண்டும்.

(9) இப்பொழுது இருப்பதுபோல இலக்கணப் பாடம் நன்ருகக் கற்பிக்கப் படவேண்டும். பாடசாலையிலுள்ள வாசகசாலையில் சென்று தாமாகவே புஸ்தகங்களைக் கற்றறிந்து காலேஜ் மாணுக்கர்களுக்குத் தான் சாத்தியம் ஆகையால் முன்போல உபபாட புத்தகங்களை ஏற்படுத்தவேண்டும்.

(10) வித்தியா இலாகா அதிகாரிகள், ஐந்தாவது வகுப்புமுதல் ஆருவது பாரம் முடியவுள்ள எல்லா வகுப்புகளுக்கும் கணிதம், சரித்திரம், பூமி சாஸ்திரம், பௌதிக சாஸ்திரம் முதலியவைகளுக்கு அப்பாகத்து தேச பாஷைகளில் பாடத் திட்டப்படி மேதாவிகளைக் கொண்டு பாட புஸ்தகங்களை எழுதும்படிச் செய்து அவைகளை அப்பாகங்களிலுள்ள பாடசாலைகளில் வைக்கும்படியான கட்டாய சட்ட மிருக்கவேண்டும். ஆங்கிலம், தாய்பாஷை புஸ்தகங்களும் வகுப்பு வரிசையாக போர்ட்டு ஸெயிண்ட் ஜார்ஜு கெஜட்டில் பிரசுரம் செய்யப் படவேண்டும். இப்படி எல்லா பாடசாலைகளிலும் எல்லா வகுப்புகளுக்கும் பாட புத்தகங்கள் ஏற்படுத்திஞல்தான் ஒரு பாடசாலையில் முதல் பாரத்தில் கற்பிக்கப்படும் புத்தகம் வேருெரு பாடசாலையில் நான்காவது பாரத்திற்கும் வேருென்றில் மூன்ருவது பாரத்திற்கும் பாட புத்தகமாக செய்ய முடியாது. பெரும்பாலும் இப்பொழுது பாடசாலைகளில் வைத்திருக்கும் பாட புத்தகங்களின் நிலைமை இப்படித்தா னிருக்கிறது. ஒரு வருஷம் முதல் பாரத்திற்கு உபபாடமாக வைத்த ஒரு புஸ்தகம் அதற்கு அடுத்த வருஷம் நான்காவது பாரத்திற்கு உபபாடமாக வைத்த விஷயமும் இதுபோலொத்த பல உதாரணங்களும் யான் அறிவேன். இப்படி ஒரே வகுப்பிற்கு மாகாணம் பூராவும் ஒரே பாட புத்தகமாக யிருந்தால்தான் முன் கூறின சர்க்கார் பரீக்ஷைகள் ஏற்படுத்த முடியும். அப்பொழுதுதான் தற்கால மாணுக்கர்கள் தகுதியற்றவர்கள் என்ற கூக்குரல் மாறும்.

இவ் விஷயங்களை கல்வி டதிகாரிகளுக்கும், அதிலும் கல்வி இலாகாத் தலைவர் கனம் ஸ்டாதம் துரை அவர்களுக்கும் சமர்ப்பிக்கிறேன். இவர்கள் பாடசாலை மாணுக்கர்களுடையவும், பொது ஜனங்களுடையவும், நன்மையைக் கருதி செய்யவேண்டிய சீர் திருத்தங்களைச் செய்வார்கள் என்று நம்புகிறேன். அதற்கு வேண்டிய மனே தைரியத்தையும் ஊக்கத்தையும் கடவுள் அவர்களுக்கு அளித்து அனுக்கிரகிப்பாராக !

[இது 1936ஞ ஆகஸ்ட் மாதத்திய "The Educational Review" என்ற சென்னை ஆங்கிலப் பத்திரிகையில் என்னல் "Reform of Education" என்ற தலைப்பின் கீழ் ஆங்கிலத்தில் எழுதப்பட்டதின் சாராம்சமாகும்.]

---



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## 68-வது காரிகை

*ப்ராப்தே சரீரபேதே சரிதார்த்தத்வாத் ப்ரதான விநிவிருத்தௌ—*

*ஐகாந்திக மாத்யந்திக முபயம் கைவல்ய மாப்னோதி.*

*தேகத்தைவிட்டு ஜீவன் கழலும் சமயங்கிட்டலும், பிரகிருதியினள் அவனைத் தொட்டு பிறப்பு இறப்புச் சுழற்கண் உருட்டும் திறனற்று வாளா நிற்பள். அச்சமயம் இரட்டைத்தன்மை வாய்ந்த கைவல்யத்தைப் பெறு கின்றான். அஃது யாதோவெனின்,—*

1. *எவருந் தேடியோடும் கடை முடிவு,*
2. *எவரும் உற்பவமாகி யொடுங்கும் தானம்.*

உரை. English translations :

When the moment does approach for the detachment of the bounden soul from the flesh, coat the power of delusion bf comes unable to push the soul any further into transmigratory existence.

The soul then attacks the duplicate Beautitude of
1. Being the final goal of all souls in evolution.

2. Being the circle of eternity in which the beginning and and of all creation take place.

*எவரும் தேடிப் பிடிக்கமுயலும் ஞேயப்பொருளாயும், உலகும் ஆன்மாக் களும் உற்பவமாய் ஒடுங்கும் ஆதிமூலமாயும் சாங்கியன் நிற்பன்.*

*மாயையுட் சிக்குண்டு இஃது என்ன மாயமெனத் தம்மை யுணரா வாரம் பிப்போர் பரத்தைத் தேடுவர். பரமநாட்டங் கொண்டார் நாடும் பரம் பொருளா யமைவது கைவல்யத்தின் ஓர் பாகம். இதுவே சிவபதம் (உருத் திரபதம்.)*

*பெத்தத்தி லிருப்பார் உற்பவமாதற்கும் பின்னர் உற்பவித்தவாறே*

ஒடுங்குதற்கும் நிலைக்களனும் (க்ஷேத்திரமாய்) நிற்பது கைவல்யத்தின் மற்றோர் பாகம் இதுவே விண்டு பதம்.

"பந்தமும் வீடும் படைப்போன் காண்க" "பந்தமுமாய் வீடுமுமாயி னார்க்கு" என்ற வாக்கியங்களைச் சீர்தூக்கி ஈசுரப்பேற்றின் இரகசியத்தை யுற்று நோக்குக.

இவண் உலகத்திற்கு நிலைக்களனு யிருப்பதென்றது ஜகத்தின் வித்தா யிருப்பதன்று; அப்பேறு பிரமனுடையது; நிலைக்களனென்றது, ஜகத்தின் வித்தையும் தாங்கி நிற்கும் சுழுத்தி நிலையை.

[இத்தகைய இரட்டைத்தன்மை வாய்ந்த கைவல்யத்தைக் காட்டா நின்ற சாங்கிய ஞானத்தின் பெருமையையும், அந்நூலைக் கண்டோனையும் கூறுவர்.]

## 69-வது காரிகை

புருஷார்த்தஸ்யானமிதம் குஹ்யம் பரமர்ஷிணசை மாக்யாதம்—

ஸ்தித்யுத்பத்தி பிரலயாஸ்ச்சிந்தியந்தே யத்ரபூதானும்.

இஃது புருஷனது இலாபத்தைக் காட்டாநின்ற ஞானக்கண். இவ் ஞானநேத்திரம் மிகவும் அந்தரங்கமான குகைக்குள்ளிருப்பது. இதனைப் பரம இருடி நன்கே விளக்கக் காட்டினர். இதனுள் பூதங்கள் பிரத்தியக்ஷ மாய் நிகழ் காலமாய் நிற்கும் நிலையும், உற்பத்தியான வரலாறும், இனித் தோற்றங்கெட்டு மறைவுறும் கடைநிலையும், சிந்திக்கப் பட்டிருக்கின்றன.

உரை. சாங்கியம் இலாபத்தைக் காட்டுங்கண்; யோகம் இலாபத்தைப் பிடித்துத் தருங் கை.

எவற்றையும் உள்ளவாறு காணவல்ல ஞானநேத்திரம் இருதயமாகிய குகைக்குள்ளிருப்பது. இதுபற்றியே தாரக மயமான முருகக்கடவுள் குக னெனவும் பெயர்பெற்றார்.

பரம இருடியென்றது கபில முனிவனை. இவனதுமேனி சிவன் மேனி போல் செந்நிறமா யிருப்பதுபற்றி இவன் கபிலன் எனப் பெயர் பெற்றான். பின்னர் இவனைப்பற்றி சிறிது கூறுவோம்.

ஐம்புலக்காட்சி எல்லைக்குள் வந்து நிற்பதுவே பிரத்தியக்ஷமாகிய திதி யாம். மறைவாய் ஐம்புலக் காட்சிக்கு அப்பாற்பட்டு நின்றதை புலனறிவிற் குக் கிட்டவைத்தவன் பிரமன், அவ்வாறு வந்ததை மறையவிடாது காப்ப வன் விண்டு. தோற்றமுறும் தந்திரத்தையும், காக்குந் தந்திரத்தையும் அடக்கி யெவற்றையும் தனது சக்தியுள் மறைப்பவன் உருத்திரன். பூதங்க ளென்பன இவண் பஞ்ச பூதங்களையும் உயிர்களையு முணர்த்தும். ஜகமும் ஜீவராசிகளும் தோன்றிய வரலாற்றையும் அவற்றைச் சிறிதுகாலம் காப்பாற் றும் இரகசியத்தையும் இந்நூல் தெரிவிக்கும் என்றனர்.

[இந்நூலை முதற்கண் கண்டவன் (ஆக்கியோன்) கபிலன். இந்நூல் எவ் வாறு உலகத்திற் கெட்டியதெனின்?]

## 70-வது காரிகை

*யேதத் பவித்ரமக்யம் முனிராசுரயே அனுகம்பயா பிரததௌ—*

*ஆசுரிரபிபம் சவிசாய தேனசபஹுதா க்ருதம் தந்த்ரம்.*

புனிதமும் கூர்மையும் வாய்ந்த இந்தத் தந்திரத்தை மகாமுனிவன் மிகுந்த கருணையோடு ஆசுரிக்குக் காட்டினன். ஆசுரி பஞ்சசிகனுக்குக் காட்டிக் கொடுத்தான். பஞ்சசிகனுல் இவ்வரிய தந்திரம் வியாபகமுற்றது.

உரை. இத்தந்திரம் மூக்கூற்றுத் துன்பத்தினின்றும் விடுவிக்கின்றமையின் மிகப் புனிதமான இரகசியம்.

கூர்மை கூறியது இத்தந்திரத்தின் பெருமையையும், நுண்மையையும், எதனையும் ஊடறுத்து நோக்கவல்ல ஆற்றலையுங் குறித்தற்கு, இதனைத் தந்திரமென்றது இதனது இரகசியத்தன்மையை நோக்கி.

கபிலனென்பான் அசத்திய வாயிலாகத் தன்னைவந்து தாக்கிய இடையூறு விளைத்த சகாரை செற்றிகட்டியால் சாம்பராக்கிய உருத்திராம்சனை அக்கினிதேவனே யாவன். இவன் வதிவது பூமியது பாதலத்தில். ஜீவராசிகட்கு அடிவயிற்றில் அக்கினி யிருப்பதுபோல் பூமிதேவியின் அடி வயிருகிய பாதலத்தில் செந்நெருப்பனுய் வதிபவன் கபிலனே.

மற்றும் ஊன்றி நோக்கவல்லார்க்கு, மூத்தித் தானத்தைக் காணுதற்கு உகந்த சாங்கியம் என்னும் ஞான நேத்திரத்தை யீந்த இக்கபிலனே, ஆயிரம் பணுமுடி கொண்ட ஆதிசேடனுகிப் புவிக்கண் பதஞ்சலி முனிவனுய் அவதரித்து மூத்தித் தானத்தை எட்டிப்பிடிக்கும் கைபோன்ற யோக தரிசனத்தை யுலகிற்குத் தந்ததாகவுந் தோன்றும். பார்க்கக் கொடுத்தவன் தொடுதற்குக் கொடானே !!!

கபிலனது மாணுக்கன் ஆசுரி, ஆசுரியது மாணுக்கன் பஞ்சசிகன். இவனைப்பற்றி மகா பாரதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. இவன் மிதிலையரசனுன ஜனகனுக்குச் சாங்கிய உபதேசஞ் செய்ததாகக் காணப்படுகின்றது. [பஞ்சசிகன் பதஞ்சலிக் குபதேசஞ் செய்தான், தத்துவசமாசம்]

சாங்கிய தந்திரம் வெளிப்பட்ட வரலாறிதுவாம்:—




(தொடரும்.)

# ஆசிரியர் குறிப்புக்கள்

## காரியக் கமிட்டியின் விளக்கம்

காங்கிரஸ் காரியக் கமிட்டி டெல்லியில் கூடி நிபந்தனையின் மீது காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்கலாம் என்று தீர்மானித்த பின், தேசத்தில் மகத்தான அரசியல் நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. கவர்னர்கள் தாங்கள் கோரிய உறுதி மொழியைக் கொடுத்து விடுவார்களெனக் காங்கிரஸ் தலைவர்கள் எதிர் பார்த்தனர். ஆனால் இந்தியா மந்திரியோ, மாகாண சுய ஆட்சி என்னும் இந்த ஆட்சி முறையிலும் கவர்னர்களுக்குப் பூரண பொறுப்பும் கொடுத்து விடாமல் பிரிட்டனிலிருந்தே இந்திய மாகாணங்களில் ஆட்சி நடைபெறும் படி செய்து விட்டார். கவர்னர்கள் உறுதி மொழி அளிப்பது சட்ட விரோத மென்று கூறலானார். இந்தியாவிலும் சிலர் அவருக்குச் சாதகமாகச் சட்டம் பேசலானார்கள். ஆனால் இங்கிலாந்திலும் இந்தியாவிலும் உள்ள அறிஞர்கள், சட்டம் பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை யென்றும், சட்டத்துக்குத் தாராள மனப் பான்மையுடன் வியாக்யானம் செய்து நல்ல சம்பிரதாயங்களை ஏற்படுத்த வேண்டுமென்றும், இந்த அரசியல் நெருக்கடியை இப்படியே விட்டு வைப்பதானது ஆபத்தான தென்றும் தெளிவு படுத்தினார்கள். மகாத்மா பல அறிக்கைகளை வெளியிட்டுத் தமது அபிப்பிராயத்தையும் காங்கிரசின் நிலைமை யையும் விளக்கினார். சர்க்கார் தரப்பிலும் சில அறிக்கைகள் வெளியாயின.

இந்த நிலைமையில் காங்கிரஸ் காரியக் கமிட்டி மீண்டும் சமீபத்தில் அலகாபாத்தில் கூடியது. காரியக் கமிட்டியினர் பெரிய தியாகிகள்; தேசத்தின் விடுதலையில் ஆர்வமுடையவர்கள். போதாக் குறைக்கு மகாத்மாவின் யோசனையும் அவர்களுக்கு உதவுகிறது. இந்த அரசியல் நெருக்கடி சம்பந்தமாக அவர்கள் செய்த தீர்மானம் மிக்க நியாயமானதும் சரியானதுமாகும் என்பதே எமது அபிப்பிராயம். காரியக் கமிட்டியினர் தங்கள் தீர்மானத்தின் மூலம் தங்கள் உறுதிமொழி கோரிக்கையை இன்னும் நன்கு விளக்கி யிருப்பதுடன் அத்தகைய உறுதிமொழி ஒன்றில்லாமல் பதவி ஏற்பது சாத்யமில்லை யென்றும் தெரிவித்திருக்கின்றனர். ஆனால் சமரசத்துக்கான கதவை மூடவில்லை. சமரச முயற்சி சர்க்கார் பக்கத்திலிருந்து வர வேண்டுமென்பது தான் அவர்கள் அபிப்பிராயம். காரியக்கமிட்டி தனது தீர்மானத்தில், 'பிரிட்டிஷ் சர்க்காரின் பழைய முறைகளைக் கொண்டும் இப்போது அது அனுஷ்டிக்கும் முறையைக் கொண்டும் காங்கிரஸ் கோரிய உறுதிமொழியை அளிக்காத பக்ஷத்தில் ஜனப்பிரதிநிதிகளான மந்திரிகள் ஆத்திர மூட்டக்கூடிய தலையீடின்றிச் சரியானபடி நிர்வாகம் நடத்த முடியாதென இக் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது' என்று குறிப்பிட் டிருப்பதிலிருந்து உறுதிமொழியின் அவசியம் நன்கு விளங்குகிறது. ஆனால் இவ் வுறுதிமொழி அளிப்பது சிரமமில்லை என்பதை விளக்க அவர்கள் தங்கள் தீர்மானத்தில், 'இந்த உறுதிமொழியைக் கொடுப்பதற்காகச் சட்டத்தைத் திருத்தவேண்டுமென அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கருதவில்லை' என்றும், கவர்னருக்கும் மந்திரிகளுக்கும் கடுமையான அபிப்பிராயபேதம் ஏற்படும் போது மந்திரிகளை நீக்கவோ, அல்லது சட்டசபைகளைக் கலைக்கவோ கவர்னருக்குள்ள உரிமையை ரத்து செய்ய வேண்டுமென்று இந்த உறுதிமொழிப்படி கோரப்படவில்லை என்றும் தெரிவித்திருக்கின்றனர். ஆகவே விஷயம் இவ்வளவு தெளிவாக்கப்பட்ட பின்னரும் அரசாங்கத்தார் உடனே நெருக்கடியைத் தீர்க்காமல் காலதாமதம் செய்வது சரியல்ல.

## ஆத்மீகத்தில் இந்தியாவின் பெருமை

இந்தியாவில் ஏற்பட்டுள்ள புதிய அரசியலைக் கண்டிப்பதற்கு அறிகுறியாக ஏப்ரல் மாதம் முதல் தேதியன்று தேசமெங்கும் ஹார்த்தால் அனுஷ்டிக்கப்பட்டதல்லவா? அப்போது இந்தியாவின் கோரிக்கையில் அனுதாபமுடைய அன்னிய நாட்டாரும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஆபீசுக்கு அனுதாபச் செய்தியை அனுப்பினார்கள். அவ்வாறு அனுப்பியவர்களில் ஒரு கோஷ்டியினரான நார்வே தேசத்திலுள்ள ஒஸ்லோ என்னுமிடத்திலுள்ள இந்தியாவின் நண்பர்கள் தங்கள் செய்தியில், 'எங்கள் அத்யாத்ம விஷயத்தில் தாய் நாடான இந்தியாவின் போராட்டத்தில் எங்கள் மனப் பூர்வமான அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்' என்று அறிவித்திருக்கின்றனர். இதனால் இந்தியாவின் ஆத்மீகப் பெருமை நன்கு விளங்குகிறதன்றோ? இந்தியா இன்று அரசியல் பொருளாதார விஷயத்தில் அடிமைப் பட்டிருந்த போதிலும் ஆத்மீக விஷயத்தில் ஒஸ்லோவுக்கு மட்டுமன்றி உலகத்துக்கே தாய்நாடக விளங்குகிற தென்பதில் எவ்வித ஆக்ஷேபமும் இல்லை. இந்தியாவின் ஆத்மீக உணர்ச்சியும் அறிவும் உலகம் பூராவும் பரவினால்தான் உலகில் சாசுவதமான இன்பமும் அமைதியும் நிலவும். அதை விடுத்து உலக வல்லரசுகள் எவ்வளவு தான் சமாதான மகா நாடுகள் கூட்டினாலும் பிரயோசனப் படாது. இந்தியாவின் ஆத்மீக உபதேசம் உலகத்தில் பரவ வேண்டுமாயின் இந்தியா முதலில் விடுதலை யடைந்து சுதந்தரம் பெற வேண்டும். இதற்கு உலக மக்கள் துணை புரிவார்களா?

---

## காங்கிரசும் முஸ்லிம்களும்

காங்கிரஸ் மகாசபை எத்தகைய ஜாதி மத வித்தியாசமுமின்றி இந்தியாவிலுள்ள மக்கள் அனைவருடைய வறுமையையும் பசிப்பிணியையும் நீக்கவே சுயராஜ்யம் விரும்புவதால் அனைவரும் அதில் நேரடியாகச் சேர்ந்து அதன் பலத்தைப் பெருக்க வேண்டியது அவசியம். இதனால்தான் சிறு பான்மை வகுப்பினரில் முக்கியஸ்தரான முஸ்லிம்களைக் காங்கிரசில் அதிகமாகச் சேர்க்கவேண்டுமென்று பண்டித ஜவஹர்லால் முயற்சி செய்கிறார். இது முஸ்லிம் சமூகத் தலைவர்கள் சிலருக்குக் கஷ்டமாக இருக்கிறது. காங்கிரஸ் உத்தியோகங்களையோ பதவிகளையோ பெற்று அவற்றை மக்களிடையே பங்கிடுவதற்காக இல்லை; ஆதலின் இவற்றில் பங்குப் பாதுகாப்பும் கேட்பது தேசாபிமானம் ஆகாது. சாதாரண முஸ்லிம்கள் தங்கள் மத சம்பந்தமான உரிமைகளுக்குப் பாதுகாப்பு கேட்பது நியாயம்தான். அது கராச்சி காங்கிரஸ் திட்டத்தில் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே காங்கிரசில் முஸ்லிம்கள் சேர்வதற்கு எத்தகைய ஆக்ஷேபமும் இல்லை. இன்னும் இதை எதிர்ப்பவர்கள் யாராயினும் அவர்கள் தேச விரோதிகளே என்பதில் ஆக்ஷேபமில்லை.

---

## சிறுபான்மை வகுப்பார் கடமை

சிறுபான்மை சமூகத்தாரின் பாதுகாப்பே அன்னிய சர்க்காரின் கையில் இருப்பதாக அவர்கள் நினைத்துக்கொண்டு அதற்காகவே கவர்னர்களுக்கு விசேஷ அதிகாரங்கள் கொடுத்திருப்பதாக இந்தியா மந்திரி முதலிய பிரிட்-

டிஷ் சர்க்கார் நிர்வாகிகள் கூறுகின்றனர். ஆனால் மகாத்மாஜியோ அவ்வாறு நினைப்பதும் கூறுவதும் தங்களுடைய சர்வ சகஜமான பிரித்தாளும் தந்திரமே என்று கூறுகிறார். இதை எல்லா ஜாதி மதங்களையும் சேர்ந்த அரசியல்வாதிகள் ஆமோதிக்கின்றனர். ஆனால் கனம். பன்னீர் செல்வம் போன்ற ஒரு சிலர் தாங்கள் மந்திரி பதவி வகிப்பதற்காகவும், இதர சௌகரியங்களை அடைவதற்காகவும் பிரிட்டிஷார் கூறும் வாதம் நியாயமானதென்று ஒப்புக்கொள்வதுடன் இல்லாமல் இந்த வாதத்தை அவர்களுக்கும் முன்பாகவே கூறிவிடுகின்றனர். ஆனால் கனம் பன்னீர் செல்வத்தின் கூற்றுக்கு நாட்டில் ஆதரவில்லை என்பது சமீபத்தில் சென்னையில் கூடிய தென்னிந்திய கிறிஸ்தவர்களின் இரண்டாவது மகாநாட்டு நடவடிக்கை நன்கு வெளியாக்கிவிட்டது. சிறுபான்மையோரும் அடங்கிய பொது மக்களின் ஆதரவு பூரணமாகப்பெற்ற மெஜாரிட்டி கட்சி மந்திரி சபையே இருக்கவேண்டுமென்றும் இப்போதைய நெருக்கடியை உடனே தீர்க்க காந்திஜியின் யோசனையைச் சர்க்கார் அங்கீகரிக்க வேண்டுமென்றும் அவர்கள் தங்கள் மகாநாட்டில் தீர்மானித்திருக்கின்றனர். கனம் பன்னீர் செல்வத்துக்கு அவரது சமூகத்தின் முழு ஆதரவு கூட இல்லை. அவர் அதிகாரத்தில் இருந்ததாலும், ஒரு சிறு தொகுதியில் நின்றதாலும் எப்படியோ தப்பித் தவறி ஜெயித்துவிட்டாரே யொழிய அவரே கிறிஸ்தவ சமூகத்தின் பிரதிநிதி என்றும் கூற முடியாதபடி இம்மகாநாட்டு நடவடிக்கை ருஜுப்பித்திருக்கிறது. கனம் பன்னீர் செல்வம் எப்போதும் தனித் தொகுதியே வேண்டுபவர். ஆனால் அம்மகாநாட்டில் கூட்டுத் தொகுதியாவது அல்லது கூட்டுத் தொகுதியில் ஸ்தானங்களாவது ஏற்பட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறதே யொழிய, தனித்தொகுதியை ஆதரிக்கவில்லை. மேலும் அம்மகாநாட்டில் காங்கிரஸ் அரசியல் திட்டத்தைத் தகர்ப்பதாக இருப்பதால்தான் அதில் சேர முடியவில்லையே யொழிய மற்றப்படி அதை ஆதரிப்பதாகவே பிரஸ்தாபிக்கப்பட்டது. உண்மையிலேயே மகாத்மா ஜெட்லண்ட் பிரபுவுக்கு அளித்த பதிலில் கூறியதுபோல் காங்கிரஸ் சிறுபான்மையோரின் நன்மைகளைக் கவனிக்கவில்லை யென்றால் அது இரண்டு நாட்கள் கூட உயிருடன் இருக்கமுடியாது. காங்கிரஸ் எல்லா வகுப்பினரும் அடங்கிய பொதுவான அரசியல் சபையாகும். ஆதலின் தங்கள் நலத்தையே பெரிதாகக் கவனிப்போர் காங்கிரசினின்றும் சிறுபான்மையோரைப் பிரித்துவைக்க முயற்சிப்பார்கள். சிறுபான்மை சமூகத்தார் இப்படிப்பட்ட தந்திரங்களுக்கு இரையாகிவிடாமல் தாங்களும் தேசாபிமானத்தில் வேறு எந்த வகுப்பினருக்கும் பின்வாங்கியவர்களல்ல என்பதை நிரூபிக்கும் பொருட்டும், தேச விடுதலைக்காக உழைக்கும் காங்கிரசின் பலமும் செல்வாக்கும் அதிகமாவதற்கும் தாங்கள் காங்கிரசினிடம் நம்பிக்கை யுடையவர்களாக இருப்பதாகவும், பெரும்பான்மையோரின் பரஸ்பர நல்லெண்ணத்தையும் ஒத்துழைப்பையும் நம்பி இருப்பதாகவும், அன்னிய சர்க்காரின் பாதுகாப்பு அவசிய மில்லை என்றும் பகிரங்கமாகத் தெரிவிக்க வேண்டியது அவசியம். சிறுபான்மையோர் பேரால் இப்போது தேசத்தில் ராஜீய நெருக்கடி ஏற்படுத்தப் பட்டிருப்பதால் தென்னிந்திய கிறிஸ்தவர்கள் செய்தது போலவே எல்லா சிறு பான்மையோரும் தங்கள் அபிப்பிராயத்தை மகாநாடுகள் மூலம் அறிவிப்பது அவர்களுடைய கடமையாகும்.

---

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



(801-வது பக்கத் தொடர்ச்சி)

## அதிகாரம்-2

### திரிசங்கு சோர்க்கம்

மாயா விரோதிக்கு சில நண்பர்கள் அத்தியந்த பிரேமையோடும் ஆர்வத்தோடும் சேவை செய்து வந்தமையால் அவர்களுள் ஒரு சிலரைக் கப்பல் அதிகாரிகளாக முத்தய்ய செட்டி நியமனம் செய்தான். கனகன் என்பவனை உதவி கப்பித்தானாகவும் கொழுக்கட்டை போல் கட்டுமஸ்தான தேகத்தைக் கொண்டிருந்த விநாயக மூர்த்தியை சூபரின்டென்டாகவும் விஸ்வநாதன் என்பவனைக் கப்பலின் சார்ஜண்டாகவும் பதவி கொடுத்து, அவர்கள் பழைய கப்பல் அதிகாரிகளுடைய பெயர்களையும் உடைகளையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கட்டளை யிட்டான்.

“நீங்கள் என்னைக் கப்பித்தானாகவே நினைத்துக் கீழ்ப் படிந்து நடக்க வேண்டும். இல்லா விட்டால் நாம் ஆபத்தில் சிக்கிக் கொள்ளுவோம்,’ என்று எல்லப்ப செட்டியாருடைய உடையைப் போட்டுக் கொண்ட மாயா விரோதி சிரித்துக் கொண்டே தனது நண்பர்களை நோக்கி உரைத்தான்.

“தாங்கள் கூறுவதை வேதமாக மதித்து நடக்கிறோம்,” என்று கனகன், விஸ்வநாதன், விநாயக மூர்த்தி ஆகிய மூவரும் மரியாதையாகச் சொன்னார்கள்.

“பெயர்களை மட்டும் மறந்து விடாதீர்கள். அதுவும் அன்றி நீங்கள் கப்பலில் உயர்ந்த உத்தியோகம் வகிப்பதால் இங்கு இருப்பவர்களுக்கும் இதில் வருபவர்களுக்கும் அதிகமாக மரியாதை காண்பிக்க வேண்டும்” என்று மறு முறையும் மாயா விரோதி அவர்களுக்கு சில விஷயங்களைக் கூறினான்.

சிறிது நேரம் ஆனதும் மாயா விரோதியும் ஏனைய புதிய உத்தியோகஸ்தர்களும் பழைய உத்தியோகஸ்தர்கள் அடைக்கப்பட்ட அறைகளுக்குச் சென்று, அவர்களைப் பார்வை யிட்டனர். எல்லப்ப செட்டியார், சிந்தாமணி முதலாயினோர் கொண்ட கோபம் எழுதி முடியாது. எதிர்பாராத விதமாகத் தாங்கள் மிகவும் பத்திரமாக சிறை செய்யப்பட்டதைக் கண்டு அவர்கள் மாயா விரோதியின் மேல் மிக்க கடுமையான பகைமையும் வெறுப்பும் கொண்டிருந்தனர்.

"மாயா விரோதி," என்று எல்லப்ப செட்டியார் உரக்க கூவினர்.

அதைக் கேட்ட மூத்தய்யன் சிரித்துக் கொண்டே, "ஓஹோ! எனது வல்லமையை நீ அறியாமல் மோசம் போனுய். சில தினங்களுக்கு முன் நான் உன் அறையில் தோன்றி என்னை விடுமாறு கேட்டுக் கொண்டேன். நீ மாட்டேன் என்றுய். அதன் பலனை இப்பொழுது அநுபவிக்கிறுய்," என்றான்.

"கப்பலுக்குப் புதிய ஆட்கள் வந்தால் நாம் நீ யார் என்பதைக் கூறி விடுவோம்," என்றார் எல்லப்ப செட்டியார்.

"நீ அப்படிச் செய்யு முன் உனது முதுகைச் சக்கை சக்கையாகப் பிய்த்து எறிந்து விடுவோம்," என்று இடி முழக்கத்தை நிகர்த்த தொனியில் மாயா விரோதி கர்ஜித்தான்.

எல்லப்ப செட்டியார் பயந்து விடவில்லை. அவர் அவன் சொல்லியதைப் பொருட் படுத்தவில்லை. ஆனல் அவருக்கு அடுத்த அறையில் இருந்த சிந்தாமணி கோடையிடியின் முழக்கத்தைக் கேட்ட ஸர்ப்பம் போல் நடு நடுங்கி, மேனி வியர்வை வெள்ளம் பொங்க, யாது செய்வது எனத் தெரியாமல் ஸ்தம்பித்துப் போனர். அதைக் கண்ணுற்ற மாயா விரோதி பெருத்த சிரிப்புடன் அவரைக் கேலி செய்து, "உன்னை உதவிகப்பல் உத்தியோகஸ்தர் என்று நியமித்த மனிதனுடைய மூடத் தனத்தை என்னவென்று சொல்வது?" என்றான்.

பின்பு கனகனைப் பார்த்து, "இந்த எல்லப்ப செட்டிக்கு கொஞ்சம் புத்தி வர ஏற்பாடு செய்," என்று சொல்லி விட்டுச் சென்றான்.

இரண்டு தினங்கள் ஓடிப் போயின. கப்பலில் சமாதானம் நிறைந்திருந்தது. பழைய உத்தியோகஸ்தர்களும் இரண்டு மூன்று போர் வீரர்களும் மாயா விரோதியின் அதிகாரத்தைப் பற்றி தூஷணை செய்ய முடியாத நிலைமையில் இருந்தனர். ஏன்? கனகன் அவர்களுக்கு குதிரைச் சாட்டையால் மாயா விரோதியைப் பற்றி ஏதும் சொல்லாமல் இருக்குமாறு செய்து விட்டான். அவர்கள் அவன் கொடுத்த அடிகளைப் பொருமல் வீறிட்டலறி வீம்பு செய்வதில்லை என்று முடிவான வார்த்தை கொடுத்து விட்டனர். அதனல் "ஜல தூதனி"ல் அமைதி ஏற்பட்டு விட்டது. கைதிகள் தமாஷாக இரண்டு தினங்களையும் கழித்தார்கள். மற்றவர்களுடைய பெயர்களை இட்டுக் கொண்டு, அன்னவர்களுடைய உடைகளில் இருந்தது அவர்களுக்கு ஒரு வகையான சந்தோஷ முகமலர்ச்சியையும் குதூகலத்தையும் கொடுத்தமையால் காலம் சீக்கிரம் சுழன்று போவதை அவர்கள் கவனிக்கவில்லை. வெகு நாள் கப்பல் உத்தியோகங்களை வகித்தவர்களைப் போல் மிகவும் உற்சாகத்தோடும் சுறு சுறுப்போடும் வேலை செய்தார்கள். புதிய வேலை ஏற்கும் போது அளவற்ற சந்தோஷமும் மனப் பூரிப்பும் ஏற்படுவது சகஜம்.

இரண்டாவது நாளின் மாலைப் பொழுது மாயா விரோதிக்கும் அவனது நண்பர்களுக்கும் சிறிது பயத்தைக் கொடுத்தது. வானத்தில் கருமேகங்கள் ஒன்று சேர்ந்து பெருத்த மழையை ஆரம்பிக்க, பெரிய புயல் ஒன்றும் உண்டாயிற்று. காற்றும் மழையும் கப்பலை எங்கு கவிழ்த்து விடுமோ என்று புதிய கப்பல் அதிகாரிகளுக்கு அச்சத்தைக் கொடுத்ததால் அவர்கள் என்னவாகுமோ என்று ஏங்கிய வண்ணம் துன்ப மனதோடு இருந்தனர். ஆனல்

மாயா விரோதி மட்டும் பயமே கொள்ளாமல் ஏனைய மனிதர்களுடைய நிலையும் நடுக்கத்தையும் கண்டு கேலி செய்துகொண் டிருந்தான்.

அப்பொழுது சிறிது தூரத்தில் ஒரு சிறு கப்பல் ஆபத்தில் சிக்கிக் கொண்டு தவிப்பது கம்பியில்லாத் தந்தி வாயிலாக "ஜலதூதன்" கப்பல் அதிகாரிக்குத் தெரிந்தது.

"புயலும் தணிந்து வருகிறது. எதற்கும் நாம் ஆபத்தில் சிக்கியுள்ள அச்சிறு கப்பலின் பிரயாணிகளைக் காப்பாற்றலாம். நீங்கள் மறந்து போய் எதையும் உளறி விடாதீர்கள்," என்று மாயா விரோதி தனது கைதி நண்பர்களை எச்சரித்து விட்டு, கப்பலை வேகமாகச் செலுத்துமாறு கப்பலோட்டிகளுக்கு உத்தரவு பிறப்பித்தான்.

இருபது நிமிஷங்களுள் "ஜலதூதன்" ஆபத்திலிருந்த சிறு கப்பலை நெருங்கியது. அந்த சமயத்தில் சிறு கப்பலில் இருந்தவர்கள் சூரியனைக் கண்ட சூரிய காந்தியைப் போல் சந்தோஷமுற்று, தாங்கள் இருந்த கப்பலை விட்டகன்றால் போதும் என்று நினைத்தனர்.

கடலில் கொந்தளிப்பு அடங்கியிரா விட்டாலும் மாயா விரோதியின் ஆட்களில் சிலர் சிறு படகுகளைக் கடலில் இறக்கி, அவற்றினுள் உட்கார்ந்து சிறு கப்பலில் இருந்தவர்களைக் காப்பாற்றினர். அவர்கள் உற்சாகத்தோடு "ஜலதூதனி"ல் மாயா விரோதி யிடமும் ஏனைய மனிதர்களிடமும் தமது நன்றியைத் தெரிவித்தனர்.

மாயா விரோதி அவர்களுள் சீமானைப் போல் விளங்கிய ஒரு பெரிய மனிதரைக் கண்டு, அவரையே உற்று நோக்கி, சிறிது யோசனையில் ஆழ்ந்தான். காரணம் என்ன? செங்கோட்டை ஜெமீந்தாரின் புதல்வர் இராஜமன்னார்—இந்திராவின் புருஷர்—பல வருஷங்கள் கடந்து போனாலும் முகத்தோற்றம் அதிகமாக மாறாமல் காணப் பட்டமையால், அவரை மாயா விரோதி தெரிந்து கொண்டான். உடனே அவனது மனதில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. தான் வெள்ளைத் தொப்பியை யணிந்த கொலையாளியைக் கண்டு பிடிக்கச் சென்று ஜெமீந்தாரைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப் பட்டது இராஜமன்னார் என்று அவன் நினைத்துக் கொண்டதும் மிக்க கோபங் கொண்டான். இராஜமன்னார் உண்மையை யறிந்தும் தன்னைக் கொலையாளியாக்கியதால் அவர் இரக்கத்திற்கும் அன்பிற்கும் தூரவிலகி நிற்பதாகக் கருதிய மூத்தய்ய செட்டி பழிக்குப் பழி வாங்க சமயம் வாய்த்ததைக் கண்டு, மனமகிழ்வு கொஞ்சம் பெற்றதால், கோபத்தைச் சிறிது மறந்து போனான். இந்திராவின் மனதிற்கு விரோதமாகவும் அவளுடைய ஐஸ்வரியத்திற்கு ஆசைப்பட்டும் இக் கட்டழகியை மணந்த இராஜமன்னார் பெரிய கொலை பாதகன் என்று மூத்தய்ய செட்டி முன்பே அறிந்திருந்தானதலால் செங்கோட்டை ஜெமீந்தாராக விளங்கும் அப் பெரிய மனிதரைக் கட்டாயமாக அவமானத்திற்கும் வேண்டுமானால், மரணத்திற்கும் உள்ளாக்கி விடலாம் என்று முடிவு செய்துவிட்டான். அப்பொழுது அவரைப் பற்றி அதிகமாகச் சிந்தனை செய்ய வேண்டியது வீண் என்றும் பிறகு அவரைப் பற்றி யோசிப்பது நலமென்றும் தெரிந்து கொண்டானதலால் நடக்க வேண்டிய விஷயத்தைப் பற்றி யோசனை செய்தான்.

இராஜமன்னார் தமது விரோதியின் மனதில் நடந்த எண்ணங்களை

ஏதும் அறியவில்லை. அது எப்படி முடியும்? மேலும் தமது உல்லாசக் கப்பல் மூழ்கும் நிலைமையில் காப்பாற்றப் பட்டதால் அதைப் பற்றியே அவர் யோசனை செய்தார். அதனால் அவர் முத்தய்ய செட்டியை யாரென்று அறிந்து கொள்ளவும் முடியவில்லை. அவரும் அவரது நண்பர்களும் "ஜல தூதன்" அதிகாரிகளுக்கு வந்தனம் செய்து, "தாங்கள் இன்று உதவிக்கு வராதிருந்தால் நாம் எல்லோரும் இறந்து போயிருப்போம்," என்றார்கள்.

"நான் என்ன, பெரிய உதவி செய்து விட்டேன்? எனது கடமையைத் தான் செய்தேன்," என்று மாயா விரோதி கெம்பீரமான குரலில் சொன்னான்.

அப்பொழுது உல்லாசக் கப்பலை விட்டும் "ஜல தூதன்" வேறு பக்கம் சென்று கொண்டிருந்தது. உல்லாசக் கப்பலின் அடியில் ஒரு சிறு துவாரம் ஏற்பட்டிருந்ததால் கடல் நீர் அதனுள் சென்று, கப்பலைத் தன் வசம் ஆக்கிக் கொண்டது. சிறிது நேர மானதும் அது சமுத்திரத்தின் அடிக்குப் போய் விட்டது.

அவ்விதம் தமது உல்லாச பயணக் கப்பல் மூழ்கியதைக் கண்ணுற்ற இராஜமன்னாரும் அவரது ஆண் பெண் ஸ்நேகிதர்களும் வருத்தங் கொண்டனர். முத்தய்ய செட்டி மட்டும் வருத்தங் கொள்ளவில்லை. திரிசங்கு சொர்க்கத்தில் தனது விரோதி இருப்பதை நினைக்க நினைக்க அவனுக்கே சிரிப்பு ஏற்படுவதாயிற்று.

"சரி, இவன் பூனையில் சிக்கிய எலியைப் போல் என்கையில் கிடைத்திருக்கிறான். மெதுவாக வஞ்சம் தீர்த்துக் கொள்ளலாம்," என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

இராஜமன்னார் கூட வந்த ஸ்நேகிதர்கள் முத்தய்ய செட்டியுடன் கப்பலின் வேறு இடங்களுக்கு அழைத்துச் செல்லப் பட்டனர். கப்பலின் மேல் தளத்திலும் நடந்து செல்லும் வழியிலும் இரத்தம் சிந்தி கறையாக இருப்பதைக் கண்டு அது எப்படி உண்டாயிற்று என்று கேட்டனர்.

"இக் கப்பலில் கைதிகள் இருக்கின்றனர்," என்று மாயா விரோதி சொன்னான்.

அதைக் கேட்டதும் சென்னையில் பிரபல நாவலாசிரியரும் இராஜமன்னாரின் சிநேகிதரும் ஆன முத்துசாமி ஐயங்கார், "மாயா விரோதி இல்லையென்று நான் நினைக்கிறேன்," என்று வாய் குழறக் கூறினார்.

முத்தய்ய செட்டி சைகை செய்து, "மாயா விரோதி இந்தக் கப்பலில் இருக்கிறான்," என்று பதில் கொடுத்தான்.

இராஜமன்னாரும் அவருடன் வந்த மூன்று மாதர்களும் ஏனைய நண்பர்களும் பயந்து போய் என்ன செய்வது என்று திகைத்துக் கல்லாய்ச் சமைந்து போயினர். தாங்கள் ஒரு நல்ல கப்பலில் வந்து சேர்ந்ததாக நினைத்ததற்கு மாறாக ஒரு கைதிக் கப்பலில், அதுவும் ஒரு கொடிய கள்வன் இருக்கும் கப்பலில் வந்து சிக்கிக் கொண்டதற்கு மிக்க வருத்தங் கொண்டனர். என்ன செய்வது என்று யாதும் தோன்றாமல் திரிசங்கு சொர்க்கத்தில் சிக்கிக் கொண்டோமே என்று ஏங்கினர்.

(தொடரும்.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஈசுவர௵ வைகாசி௴—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1356,
இங்கிலீஷ் 1937௵ மேய்௴—ஜூன்௴

| வைகாசி | மேய் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வெள் | பஞ்53-5 | திரு7-28 | சித்60 | சங்கரஜயந்தி, ரிஷபரவி நா-3-25, விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 15 | சனி | சஷ்49-8 | புன3-55 | சித்60 | சஷ்டி, கதிர றுக்க |
| 3 | 16 | ஞா | சப்46-55 | பூச2-13 | சித்60 | கங்கா சப்தமி |
| 4 | 17 | திங் | அஷ்46-28 | ஆயி2-8 | சித்2-8மர | ஆயுதம் பழக |
| 5 | 18 | செவ் | நவ47-50 | மக4-0 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 6 | 19 | புதன் | தச50-35 | பூர7-25 | அமி60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 7 | 20 | வியா | ஏகா54-40 | உத்12-20 | மர12-20சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 8 | 21 | வெள் | து59-48 | அஸ்18-20 | அ18-20சி | பரசுராம துவாதசி |
| 9 | 22 | சனி | திர60 | சித்25-8 | மர25-8அ | சனிப்பிரதோஷம் [த்தம் |
| 10 | 23 | ஞா | திர7-23 | சுவா32-40 | சி32-40மர | நரசிம்மஜயந்தி, சர்வ முகூ |
| 11 | 24 | திங் | ச○12-0 | விசா40-23 | மர40-23சி | ○, வைசாக பௌர்ணமி |
| 12 | 25 | செவ் | பவு18-28 | அனு48-8 | சித்48-8ம | சுக் சனி \| புத \| சூரி கே |
| 13 | 26 | புத | பிர24-38 | கே55-35 | சி55-35மர | |
| 14 | 27 | வியா | துதி30-25 | மூல60 | சித்60 | |
| 15 | 28 | வெள் | திரி35-28 | மூல2-33 | அ2-33பிர | 10-மேஷ-சுக் |
| 16 | 29 | சனி | சது39-33 | பூர8-35 | சித்60 | 23-துலா-செ |
| 17 | 30 | ஞா | பஞ்42-23 | உத்13-33 | அமி60 | குரு \| 14-ரிஷ-புத |
| 18 | 31 | திங் | சஷ்43-42 | திரு17-15 | அ17-15சி | |
| 19 | 1 (1937௵ ஜூன்௴) | செவ் | சப்43-25 | அவி19-23 | சி19-23ம | |
| 20 | 2 | புத | அஷ்41-23 | சத19-48 | சி19-48அ | செ |
| 21 | 3 | வியா | நவ37-38 | பூர18-58 | சித்60 | ராகு |
| 22 | 4 | வெள் | தச32-20 | உத்15-43 | சி15-43அ | விவாகம், சர்வ முகூர்த்தம் |
| 23 | 5 | சனி | ஏகா25-40 | ரே11-25 | மர11-25சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 24 | 6 | ஞா | து17-55 | அஸ்5-55 பர59-33 | சித்60 | பிரதோஷம், அவமாகம், அடுப்பு போட |
| 25 | 7 | திங் | திர9-20 | கி✻52-33 | ம52-33அ | கிருத்திகை, மாச சிவராத்ரி |
| 26 | 8 | செவ் | சது0-18 அ●51-10 | ரோ45-33 | அ45-33சி | சர்வத்திர அமாவாசை, அவமாகம் [செலவிட |
| 27 | 9 | புதன் | பிர42-28 | மிரு38-50 | சித்60 | ஜேஷ்ட சுத்தம்; தானியம் |
| 28 | 10 | வியா | துதி34-25 | திரு32-48 | ம32-48அ | சந்திர தெரிசனம் |
| 29 | 11 | வெள் | திரி27-33 | புன27-28 | சி27-28ம | சுவர்ண கௌரி விரதம் |
| 30 | 12 | சனி | சது22-0 | பூச24-20 | சி42-20மர | மாசசதுர்த்தி விரதம் |
| 31 | 13 | ஞா | பஞ்18-10 | ஆயி22-40 | சி22-40மர | சஷ்டி, நவக்கிரக சாந்தி |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" PRESS,**
**NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.**